# கள்வர் தலைவன்

நாடகப் பேராசிரியர்

**ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.**

அவர்களால் இயற்றப்பட்டது.

**இவர் எழுதிய மற்ற நூல்கள்**

லீலாவதி - சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பியவிதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனா, புஷ்பவல்லி, உத்தம பத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான் பேட்டை சப் அசிஸ்டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நாடக மேடை நினைவுகள்—ஆறு பாகங்கள், நாடகத் தமிழ், யயாதி, பிராமணனும் சூத்திரனும், வாணிபுர வணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, கண்டு பிடித்தல், கோனேரி அரச குமாரன், சந்தையிற் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக் கலையில் தேர்ச்சி பெறுவதெப்படி? ஹாஸ்ய வியாசங்கள், தமிழ் பேசும் படக்காக்ஷி, விடுதிப் புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், வள்ளி மணம், கதம்பம், மாண்டவர் மீண்டது. ஆஸ்தானபுரம் நாடகச் சபை சங்கீதப் பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள், சபாபதி ஜமீந்தார், சிவாலயங்கள், இந்தியாவிலும் அப்பாலும் — ஐந்து பாகங்கள், சிவாலய சிற்பங்கள், சதி சக்தி, மனை ஆட்சி, இந்தியனும் ஹிட்லரும், தீபாவளி வரிசை, காலக் குறிப்புகள், சுப்ரமண்ய ஆலயங்கள், தீயின் சிறு திவலை, கலையோ காதலோ, உணவுப் பொருள்கள், சபாபதிதுவிபாஷி, சபாபதி துணுக்குகள், இல்லறமும் துறவறமும்.

ஐந்தாம் பதிப்பு

அருட்பெருஞ்ஜோதி அச்சகத்தில்

அச்சிடப்பட்டது 2.50

 1955 [விலை ரூபா

# கள்வர் தலைவன்



## இந்நாடகத்தில் வருபவர்கள்

| | |
|---|---|
| ஏமாங்கதன் | —புஷ்பபுரத்தரசனுடைய முதன் மைந்தன் |
| சௌரியகுமாரன் | —ஏமாங்கதன் தம்பி. |
| பாலசூரியன் | —ஏமாங்கதன் புதல்வன். |
| பலாயனன் | —புஷ்பபுரத்து மந்திரி. |
| ஜெயபாலன் | —ஒரு விஷவைத்தியன். |
| சூடாமணி | —ஒரு வணிகன். |
| தாரகன் | —பலாயனன் வீட்டு வேலையாள். |
| காஞ்சேயன்<br>விடங்கன் | —சௌரியகுமாரன் தூதர்கள். |
| நாயனார்<br>வயத்தான்<br>கோஸ்கி<br>மக்கன்தேவ்<br>அந்தர்டப்பு<br>இரிச்சன்<br>காயி<br>தோப்பாசாமி | —கள்வர்கள். |
| சௌமாலினி | —ஏமாங்கதன் மனைவி. |
| சுசங்கதை | —சௌரியகுமாரன் தங்கை. |

கள்வர், சேவகர்கள், முதலியோர்.

இடம்:—அதிகபாகம் புஷ்பபுரத்திலும், அயலிலுள்ள தாமகாரண்யத்திலும், சிறிது பாகம் குமாரபுரத்திலும்.

ப. விஜயரங்க முதலியார்—மாணிக்கம்மாள்

ஆகிய என் தந்தை தாயார்

ஞாபகார்த்தமாக இது அச்சிடப்பட்டது

# முகவுரை

இந்நாடகத்தையாவது, அல்லது நான் பதிப்பித்துள்ள எனது மற்ற நாடகங்களையாவது, எந்த சபையாராவது ஆட வேண்டுமென்றால், முன்னதாக எனக்குச் சேரவேண்டிய ராயல்டி கட்டணத்தைக் கட்டி, என் அனுமதி பெற்றே, பிறகு ஆடவேண்டும்; இல்லாவிடில் காபிரைட் சட்டப் பிரகாரம், போலீஸ் கோர்ட்டில் தாவாவுக்குள்ளாவார்கள் என்பதை இதனால் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஒரு கிரந்த கர்த்தாவுக்குச் சேரவேண்டிய ராயல்டி, அவர் ஆயுசுபர்யந்தமும், அதற்கு மேல் 50 வருஷகாலம் அவரது வார்சுகளுக்கும், உரித்தாயது என்பதை எல்லோரும் அறிவார்களாக.

நான் அச்சிட்டிருக்கும் புஸ்தகங்கள் வேண்டியவர்கள் சென்னை ஆச்சாரப்பன் வீதி, 70-வது கதவிலக்கமுள்ள வீட்டிலும், எல்லாப் பிரபல புஸ்தக வியாபாரிகளிடமும் வாங்கிக் கொள்ளலாம்.

இப்படிக்கு,
ப. சம்பந்தம்.

# கள்வர் தலைவன்

## முதல் அங்கம்

### முதற் காட்சி

*இடம்:— தாமகாரண்யத்தில் ஒரு காட்டாற்றை யடுத்த அடர்ந்த இடம். இங்குள்ள கள்வர்கோயிலுக்கெதிரில் ஏமாங்கதன் பலிபீடத்தருகிலுள்ள ஒரு ஸ்தம்பத்திற் கட்டப்பட்டிருக்கிறான்.*

ஏ. *ஐயோ! இப்பாதகர்கள் சீக்கிரம் வந்து என்னைக் கொன்றுவிட மாட்டார்களா! எத்தனை நேரம் நானிவ் வேதனையிலிருப்பேன்? என் ஐம்பொறிகளும் கலங்குகின்றனவே. என் மனமும் ஒரு வழி நில்லாது பெருஞ்சுழல் மத்தியிலகப்பட்ட துரும்பைப் போல் தத்தளிக்கின்றதே! இம்மனோ சஞ்சலத்தையும் தேக பாதையையும் அனுபவிப்பதைவிட சீக்கிரம் இறப்பேனாயின் நான் எவ்வளவு பாக்கியம் பண்ணினவனாயிருப்பேன். ஐயோ! இக்கதியனுபவிப்பதற்கோ நான் மாறுவேடம் பூண்டு புஷ்பபுரியினின்றும் தப்பிவந்தேன்! நான் அங்கேயே இருந்திருப்பேனாயின் யாராவது என்னை ஹிம்சியாது சீக்கிரம் கொன்றுவிட்டிருப்பார்களே! இந்த யமவேதனைக் கெல்லாம் ஆளாயிருக்க மாட்டேனே! ஐயோ! இக்கொடிய பாதகர்கள் கையிற் படுமுன் என்னுயிரையாவது மாய்த்துக்கொண்டிருக்கலாகாதா நான்!—ஆ! யார் விதி யாரை விட்டது! ஈசனே! ஈசனே! என்னைக் கைவிட்டீரே!—சீ! ஈசன் ஒருவனிருக்கின்றானோ! இருந்தால் ஏன் நான் இக்கதிக்கு ஆளாக்கப்பட்டிருக்கவேண்டும்! நான் புத்தி அறிந்தது முதல் பிறருக்கு ஒரு தீங்கும் செய்ததுமில்லை நினைத்ததுமில்லை. அப்படியிருக்க நான் ஏன் இக்கதிக்கு வரவேண்டும்? இதைவிடக் கேடான கதி ஒருவனுக்கு வாய்க்கப் போகின்றதோ?—பிறருக்கு நன்மை செய்தால் தனக்கு நன்மை பயக்குமென்கிறார்களே! நான் பிறருக்கு நன்மையே செய்திருக்க எனக்கு தீமையே பயந்து*

நான் இக்கதிக்கு வந்தேனே ! சீ ! நான் மற்றவர்களைப் போல் கள்ளம் கபடமுடையவனு யிருந்திருப்பேனுயின் இக்கதிக்கு வந்திருக்கமாட்டேனென்பது திண்ணம் !— இதெல்லாம் முன் வினைப்பயனே! – ஏன் இன்னும் இந்த யமகிங்கிரர்கள் திரும்பி வரவில்லை ? ஐயோ! என் மனதை நான் எவ்வளவு திருப்பியும் ஒரு வழியில் நில்லேனென் கிறதே ! அப்பா ! பாலசூரியா ! உன்னையும் உனதன்னை யையும் கடைசி முறைப் பாராது நான் இறக்கவேண்டி யதா யிருக்கின்றதடா! என் கண்மணியே! என்னை மேம் படுத்த வந்த என்னருஞ் செல்வமே! நான் இறந்த பின் யாரையடா அப்பா என்றழைக்கப் போகின்ருய் ? நான் இறந்ததை யறிந்தால் நீயும் இறப்பா யென் பது நிச்சயம். பிறகு பேதையாகிய உன் அன்னைக்குத் தேறுதல் சொல்வார் யார் ? ஐயோ! சௌமாலினி எட்டு மாதத்துப் பூரண கர்ப்பிணியா யிருக்கின்ருளன்ருே ! அந்தோ! அந்தோ! என் மனம் சுழல்கின்றது ! ஒன்றும் தோற்றவில்லையே ! என் கண் பஞ்சடைகின்றதே ! பால சூரியா ! சௌமாலினி—

**ஜெயபாலன்** *தூரத்தில் வருகிருன்.*

**ஜெ.** ஈதாகும் மனிதனுடைய வாழ்க்கை ! ஒவ்வொரு மனித னும் என்ன என்ன எண்ணங்களெல்லாம் எண்ணி என்ன என்ன தீர்மானிக்கிருன் ! அவைகள் எவ்வெவ் விதம் முடிகின்றன! பேதை மனிதனுல் என்ன முடியும்? இவ்வுண்மையை அறியாது மனிதன் எவ்வளவு தான் என்கிற அகங்காரத்தையும் கர்வத்தையும் கொள்ளுகின் ருன்! இதற்குப் பிரத்தியட்சமான உதாரணம் என் கண் முன்பாக இதோ தோற்றுகின்றதே ! இப்பேதை மனி தன் சற்று முன்பாக நமது கள்வர் கையிற்படுமுன் என்ன என்ன எண்ணியிருந்தானே ? அவ்வெண்ணங் களெல்லாம் சிறிது பொழுதுக்குள் என்னவாகப் போகின்றன! ஐயோ பாவம், பேதை மனிதன் ! சீ ! அதி ருக்கட்டும் இப்பொழுது அவனைப் பார்த்து பரிதாபப் படுகின்ற நான் அவனைவிட என்ன உயர்ந்த ஸ்திதியி லிருக்கிறேன் ? அவன் இன்னும் கால் நாழிகையி லிறக்கப் போகின்ருன்; நான் இன்னும் ஒரு மாதத்திலிறக்கப் போகின்றேன். ஒரு மாதமா ? ஆம், சரியாக ஒரு மாதம் இன்னும் கெடு வைத்திருக்கிருன் சௌரிய குமாரன் நமக்கு. ஆ! சௌரிய குமாரா !—ஆயினும் இப்பேதை மனிதனுடைய மனநிலைமை எப்படியிருக்கிறதென்று

அருகிற் சென்று கண்டறிவோம்! [அருகிற் செல்கிருன்.] என்ன, கண்ணைமூடிக்கொண்டிருக்கின்ருன்? இறந்துவிட்டாஞ? என்ன பயத்திஞல்? இல்லை மெய்ம்மறந்தான் போலும்! இவனை நாம் எங்கேயோ பார்த்த ஞாபகமாயிருக்கின்றது?—ஓ! இவர் சௌரிய குமாரனுடைய அண்ணனன்ரே? ஆம் ஆம்! இவர் மாறுவேடம் பூண்டு இங்குவந்து நமது கள்வரிடம் அகப்படும்படி நேரிடுவானேன்?—ஓ! அப்படியேதாவது நேரிட்டிருக்கலாம்! நாம் இவரை இறக்க விடுவது நியாயமன்று. இவ்விசேஷத்தினுண்மையை அறியவேண்டும். [ஏமாங்கதன் முதுகை மெல்லத் தொடுகின்ருன்.]

ஏ. ஓ! காலம் வந்து விட்டது! அப்பா! உங்களை நான் மிகவும் வேண்டிக்கொள்ளுகின்றேன், என்னை ஹிம்சியாது ஓரே வெட்டாய் வெட்டி விடுங்கள்.

ஜெ. ஐயோ பாவம்! நான் தம்மைக் கொல்ல வந்திருக்கின்றதாக எண்ணிக் கூறுகின்ருர்.—ஏமாங்கதராஜனே! நான் உம்மைக் கொல்லவரவில்லை கண்விழித்துப் பாரும்.

ஏ. [பயந்து கண்விழித்து] அப்பா! நீ யார்? நான் ஏமாங்கதனென்று உனக்கெப்படி தெரியும்?

ஜெ. சொல்லுகிறேன். இதோ [ஏமாங்கதனைக்கட்டியிருக்கும் கயிற்றை யறுத்து, ஸ்தம்பத்தினின்றும் விடுவிக்க, ஏமாங்கதன் மூர்ச்சையாகின்ருன்.] பாவம் மூர்ச்சையாயினன்! [சயித்தியோபசாரம் செய்கின்ருன்.]

ஏ. [கண்விழித்து] நான் என்ன கனவு காண்கின்றேனே!

ஜெ. இல்லை இல்லை.

ஏ. அப்பா! நீயாராயிருந்தாலுமிருக்கட்டும். நாம் இவ்விடத்தை விட்டு சீக்கிரம் அப்புறம் போவோம். நான் இங்கிருப்பேனுயின் என்னைக் கொன்று விடுவார்கள்! சீக்கிரம் எழுந்திரு! ஐயோ! எழுந்திருக்கவும் எனக்குச் சக்தியில்லையே! [ஜெயபாலன் மடிமீது விழுகின்ருன்.]

ஜெ. ராஜகுமாரா! எழுந்திருக்கவேண்டாம். ஒன்றும் பயப்படாதீர். நான் உம்மைக் காப்பாற்றுகின்றேன். தாம் ஏது இங்கு இவ்வுடையுடன் வந்தது? நடந்த விருத்தாந்தத்தை உண்மையாக ஒளியாது கூறும்.—என்னிடம் கூறச் சந்தேகப்படுகின்ருற் போலிருக்கிறது. ஒரு சந்தேகமும் வேண்டாம். நீர் ஒன்றும் பயப்படவேண்டியதில்லை, என்ன சமாசாரம்?

கோஸ்கி, மக்கன்தேவ், வயத்தான், அந்தர்டப்பு, இரிச்சன், நாயனார், காயி, தோப்பாசாமி, முதலிய கள்வர், குடத்தில் ஜலம் வேப்பிலை முதலியவைகளை எடுத்துக்கொண்டு ஒரு புறமாக வருகின்றனர்.

வ. அடடே! எங்கேயோ பூட்டாண்டா! ஓடி பூட்டாண்டா தப்பிச்சிகினு. [மற்றெல்லோரும்] ஆமாண்டா! ஆமாண்டா !

நா. இல்லை ! இல்லை அதோ இருக்கிறான் பார் !

இ. அடே ! நம்பசாமி பக்கத்திலே உக்காந்துகினு இருக்கிறார்டா !

நா. ஒரு வேளை அவர் தான் அவிழ்த்துவிட்டாரா என்ன ?

கோ. அடே இரிச்சா ! போயி கேக்கலாமா சாமியே ?

வ. ஆமாண்டா ! இண்ணைக்கி எப்புடியும் நரபலிகொடுக்கணும் இல்லா போனா இந்த வருஷமெல்லாம் வவுத்துலே மண்ணு தான் !

கோ. ஆமாம் ஆமாம், நீ போயி சாமியே கேளு.

நா. ஆமாம். அடே வயத்தான்! நீ தான் சரியானவன், போய் கேள், நாங்கள் பின்னால் வருகிறோம்.

வ. ஒரு வேளெ கோவிச்சிகினா சாமி, என்னடா செய்யரது ?

இ. ஒண்ணும் கோவிச்சிக்க மாட்டாரு, நீ போயி கேளு.

வ. நாம் மாட்டேண்டா எனக்கு பயமா இருக்குது !

இ. அடே ! கேட்டா எம்பங்கு தேங்கா தர்ரேன் !

வ. தேங்காயா ! தேங்காயா ! ஒரு முடி தரணும்.

இ. தர்ரோம் போ. தேங்கா இண்ணா ஆ இண்ணு வாயெ தெறக்குறும் பார் !

வ. என்னா இண்ணுடா கேக்கரது ?

நா. சத்!—நாழி ஆய்விட்டது பலிகொடுக்கவேண்டுமென்று கேள். அடே, இல்லாவிட்டால் இவனையே பிடித்து பலி கொடுத்து விடலாமாடா !

கோ. ஆ ! சரியான வேலை, வா இப்படி, போயி கேக்கிறையா என்னா ?

வ. இல்லை இல்லை, இதோ போயிகேக்கரேன்.

[அவர்களிருக்குமிடம் போகிறார்கள், வயத்தான் முதலிலும் மற்றவர்கள் பின்னுமாக.]

வ. சாமி.—

ஜெ. என்னடா அது ?

வ. உம்—[பின்னால் இருப்பவர்களுக்குச் சைகை செய்கிறான்] உம்—என்னடா சொல்ரது ? என்னடா சொல்ரது ? [திரும்பி மற்றவர்களைக் கேட்கிறான்.]

இ. தேங்கா !—பத்திரம்.

ஜெ. என்னடா அது ?

வ. உம்—தேங்கா—

ஜெ. தேங்காயாவேண்டும் ? அடே! இப்படி வாருங்கள் எல்லோரும். இவரையல்லவா இன்றைக்கு நரபலிகொடுக்க இங்கே கட்டிவைத்தீர்கள் ? இவர் யார் தெரியுமா உங்களுக்கு ?

எல். தெரியாது !

ஜெ. இவர் என்னுடைய பிராண சிநேகிதர். இவரையா கொல்லப் பார்த்தீர்கள் நீங்கள் ?

எல். இல்லை சாமி ! இல்லை !

ஜெ. நான் சொல்வதைக் கேளுங்கள். இனிமேல் நீங்கள் எப்பொழுதும் நரபலி கொடுக்கலாகாது. நான் ஆக்ஞாபிக்கின்றேன்; நமக்கொரு துன்பமும் செய்யாத எம்மனிதனையும் நாம் வருத்தலாகாது என்று நான் கட்டளையிட்டிருக்கின்றதை மறந்தீர்களோ ?

கோ. ஆமாஞ்சாமி, பொலிபோடா போனால் கருப்பண்ணசாமி கோவிச்சிகினா ? அப்புறம் இந்த வருஷமெல்லாம் நமக்கொண்ணும் ஆப்பிடாதே.

ஜெ. அப்படி யல்ல, ஒரு ஆட்டைப்பிடித்துக்கொண்டு போய் பலியிட்டு பூஜை நிறைவேற்றுங்கள்.

வ. ஆமாஞ்சாமி ! ஆமாஞ்சாமி ! நல்லவேலை !

இ. ஆடு ஓதவுமடா ?

வ. வாயெ மூடுடா உனக்கென்ன தெரியும் ! மனுஷனைக் கொண்ணு என்ன பிரயோஜனம் ? ஆட்டைக்கொண்ணாலும் திண்ணலாம்.

நா. எப்பொழுது பார்த்தாலும் திண்டியே இவனுக்கு.

வ. ஆமா சாமி! மனுஷன் எவ்வளவுபெரியவனா இருக்கரான்? ஆடு இவ்வளவுண்டா இருக்குதே. ஒரு ஆடு போதுமா? நாலு ஆடு பொலிபோட்டா அதுக்கும் இதுக்கும் சரியாயிருக்கும்.

ஜெ. அப்படியே. சரிதான் புறப்படுங்கள் பூசைபோட.

வ. பலே! அடேகோஸ்கி! இரிச்சா! மக்கன்தேவு! காயி! அல்லாம் வாங்கடா. இண்ணைக்கு நரிமூஞ்சிலே முழிச்சோண்டா நாலாடுடா !

நா. நாலாடு என்னத்துக்கடா ?

வ இத்தனி பேரிருக்கிறோமே ஒரு ஆடுபோதுமா ? நானே ஒரு ஆடுதிண்ணுவனே ?

இ. ஒரு ஆடு!

வ. பந்தியம் கட்டரையா?

இ. உம். என்ன பந்தியம்?

வ. ஒரு ஆடு நான் திண்ணுப்போனு இன்னொரு ஆடு துணை ணச் சொல்ரது.

கோ. கெட்டிக்காரன்தான் வா, நேரமாச்சி அதுக்குத்தானே உனக்கு வவுத்தான் இண்ணுபேரு வைச்சாங்கள். [கள்வ ரெல்லாம் போகின்றார்கள் சந்தோஷமாய்]

ஜெ. அரசே, இனி சொல்லலாமே தாங்கள்.

ஏ. அப்பா! நீ என்னுயிரைக் காப்பாற்றிய பரமபுருஷன். என்னுயிர் உன்னுடைமையாய்விட்டது. இனி நீ கேட் பதை நான் மறுப்பேனோ? ஆயினும் இக்கள்வர் கூட்டத் திலிருந்தும், உன்னைப்பார்த்தால் ஈவு இரக்கமுள்ளவனு கத் தோற்றப்படுகின்றாய். என்னுடைய விருத்தாந்தத் தைக் கேட்பாயாயின் வீணுக வருத்தப் படுவாய். நான் ஏன் கூறவேண்டும்?

ஜெ. அப்படியல்ல, சொல்லும் கேட்போம்.

ஏ. நான், புஷ்பபுரத்தரசனுகிய சச்சந்தனுடைய மூத்தகுமா ரன், என்பெயர் ஏமாங்கதன். என் தாயார் என்னைப் பெற்றவுடன் இறந்து விட்டார்கள். பிறகு என்பிதா வேறொருமணம் செய்துகொண்டார். அனுசூயா தேவி யாகிய அம்மாற்றாந்தாய் மூலமாக எனக்கு சௌரிய குமாரன் சுசங்கதை என்று ஒரு தம்பியும் தங்கையு முண்டு. அனுசூயாதேவி என்னிடம் மிகவும் அன்பு பாராட்டி வந்தாள். சௌரியகுமாரனும் சுசங்கதையும் என்னைத் தம்முடைய சொந்த தமையனைப் போலவே பாவித்து வந்தார்கள்.

ஜெ. உம்முடைய தம்பியின் பெயரென்ன?

ஏ. சௌரிய குமாரன். சுவாமியினுடைய கிருபையால் நான் எல்லா சௌக்கியங்களையும் பெற்று விவாகமாகி புத்திர சந்தானத்துடன் வாழ்ந்து வந்தேன்.

ஜெ. சௌரிய குமாரனுடைய நண்பன் ஜெயபாலன் என் றொருவன் இருந்தானே உமக்குத் தெரியுமா?

ஏ. தெரியும், அவர்களிருவரும் உயிர் நண்பர்களாயிருந்தார் கள். ஆனுல் நான் ஜெயபாலனைப் பார்த்ததில்லை. அவன் இரண்டு வருடங்களுக்கு முன்பே இறந்ததாகக்

கேள்விப் பட்டேன். அப்பா, அதையேன் கேட்கின்றாய்? உனக்கு அவனைத் தெரியுமோ ?

ஜெ. இல்லை சும்மா கேட்டேன். அப்புறம் சொல்லும், தாம் இந்த ஸ்திதிக்கு வந்ததேது? அதைக் கூறும்.

ஏ. என்னுடைய பிதா நான் அவருக்கு விஷம் கொடுத்துக் கொல்லப் பிரயத்தனப் பட்டதாகக் கூறி என்னைத் தன் நாட்டெல்லைக்குள்ளிருந்தால் யார் வேண்டுமென்றாலும் கொன்றுவிடலாமென்று கட்டளை யிட்டுத் துறத்திவிட்டார். [கண்ணீர்விடுகிறார்.]

ஜெ. அரசே ! வருந்தவேண்டாம் சொல்லும்.—உம்.

ஏ. அப்பா ! என்னைப்பார்த்தால் தகப்பனுக்கு விஷம் கொடுத்துக் கொல்லும்படியான துரோகியைப்போலவா யிருக்கின்றது ? அப்பா! அப்படிப்பட்ட பாதகர்களும் இவ்வுலகிலிருக்கிறார்களோ ? அதை நினைத்தாலும் எங் நெஞ்சம் பகீர் என்கின்றதே !

ஜெ. இதென்ன தாம் ஓர் ஆடவன் என்பதை மறந்தீரா என்ன ? அரசே ! நீர் உம்முடைய பிதாவுக்கு இவ்வாறு ஒரு காலும் துரோகம் நினைத்தும் இருக்கமாட்டீர் என்று உறுதியாக நம்புகின்றேன் நான். ஆயினும் உம்முடைய பிதா எதைக்கொண்டு இவ்வாறு உம்மீது சந்தேகித்தார்? அதைச் சற்று விளங்கச் சொல்லும்.

ஏ. இதோ சொல்லுகிறேன். உன்னிடம் கூறியாவது என் துயரம் தணிகின்றேன். சில தினங்களுக்கு முன் ஒரு நாள் இரவு அரண்மனையில் நாங்களெல்லோரும் போஜனம் பண்ணிக் கொண்டிருக்கும் பொழுது பிதா தன் பாத்திரத்திலிருந்த தண்ணீரைச் சாப்பிட்டுவிட்டு இன்னும் வேண்டுமென்று கேட்க, அவர் பக்கத்திலுட்கார்ந்திருந்த நான் எனது பாத்திரத்திலுள்ள ஜலத்தை அவருடைய பாத்திரத்தில் விட்டேன். உடனே என் பாத்திரத்திலிருந்த பொழுது வெறும் ஜலமாயிருந்தது அவருடைய பாத்திரத்திற் பட்டமாத்திரத்தில் வெண்மைநிறமாக மாறியது. அதைக் கண்டவுடன் என்பிதா முகம் கறுகி என்னைச் சற்று நேரம் கோபித்து உற்றுப்பார்த்துவிட்டுச் சாப்பாட்டை விட்டு அப்பாத்திரத்தை அப்படியே எடுத்துக்கொண்டு தன் அறைக்குட் சென்றார். இதை யெல்லாம் கண்டவுடன் நான் திக்பிரமைகொண்டு சற்று நேரம் அசைவற்றுப் போயினேன். பிறகு என் பிதாவிடம் என்னவென்று விசாரிக்கச்சென்றபொழுது, தான் என்னை மறுபடியும் கண்

ஞல் பார்க்க மாட்டாரென்றும், நான் அவருக்கு விஷம் கொடுத்துக் கொல்ல முயன்றதாகவும், அதற்காக நான் ஏழு தினங்களுக்குள் தனது நாட்டை விட்டுச் செல்ல வேண்டுமென்றும் அதற்கப்புறம் தனது நாட்டெல்லைக்குள் நானிருப்பேனுயின் என்னை யார்வேண்டுமென்ருலும் கொன்றுவிடலாமென்றும் கடுமையான கட்டளையிட்டனுப்பினுர். பிறகு நான் என் பிதாவை நேரிற் கண்டு பேசவேண்டுமென்று என்னுலியன்றவளவு முயன்றும் அவர் ஒரே பிடிவாதமாய் என்னைப் பாரேனென்று சொல்லிவிட்டார். பிறகு—

**ஜெ.** உம்முடைய பிதா வைத்திருந்த பாத்திரம் என்ன பாத்திரம் ஞாபகமிருக்கின்றதா உமக்கு ?

**ஏ.** அவருக்கென்று செய்யப்பட்ட பஞ்சலோக பாத்திரம் ஒன்று.

**ஜெ.** என்ன ! பஞ்சலோக பாத்திரமா ?

**ஏ.** ஆம், என்ன ஆச்சரியப் படுகின்ருய் ?

**ஜெ.** ஒன்றுமில்லை, அந்த ஜலம் எந்த வர்ணமாக மாறியதென்று கூறினீர் ?

**ஏ.** வெண்மையாகப் பால்போல மாறியது. அப்பா, என்ன விசேஷம் ? இதைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா ? என்ன யோசிக்கின்ருய் ?

**ஜெ.** [தனக்குள்] ஆகா !—இரண்டாவதோ !—இதை நான் முன்பே அறிந்திருப்பேனுயின் !—அப்படியா !—நான் யாரை நோவது ? என்னையே! என்னையே !—உம் அப்புறம் சொல்லும்.

**ஏ.** பிறகு நான் எப்படியாவது பிதாவின் கோபத்தைத் தணிக்கின்றேன், நீர் இந்நாட்டை விட்டுச் செல்லவேண்டாமென்று என்னைத் தன் சொந்த அண்ணன்போற் பாவிக்கின்ற சௌரிய குமாரன் கூறவே, அந்த ஏழு தினங்களும் புஷ்பபுரியிலேயே இருந்துவிட்டேன். அவனுடைய பிரயத்னமும் பயன்படாமற் போகவே, அந்த ஏழு தினங்களும் கழிந்தவுடன் இனி அங்கிருப்பது அபாயமெனக் கருதி மாறுவேடம் பூண்டு இங்கு வந்து வழிதெரியாது உழன்றுகொண்டிருக்கும் பொழுது இப்பாதகர்கள் கையிலகப்பட்டேன். இதுவே நடந்த விர்த்தாந்தம். என்னுடைய பிதாவின் மீது ஆணைப்படி இதில் சற்றேனும் பொய்யில்லை. என்னுடைய பாத்திரத்தில் யார் முன்பாக விஷத்தை வார்த்து வைத்திருந்தார்களோ இதெல்லாம் சத்தியமாக எனக்கு

ஒன்றும் தெரியாது. ஆனால் எனக்கொன்று மாத்திரம் சந்தேகமாயிருக்கின்றது. என்னுடைய பாத்திரத்திலல்லவோ விஷம் முதலிலிருந்தது; ஆகவே அது என்னைக் கொல்லவல்லவோ வைக்கப்பட்டிருக்க வேண்டும். இதைப் பிதா யோசியாமற் போனாரே.

**ஜெ.** அது விஷமென்று உமக்கு உறுதியாக எப்படித் தெரியும்?

**ஏ.** நான் என்னுடைய தங்கையாகிய சுசங்கதையைக் கேட்டேன். அவள் பஞ்சலோக பாத்திரத்தில் உருமாறியபடியினால் அது விஷமாகத்தானிருக்க வேண்டுமென்று பிதா கூறியதாகச் சொன்னாள். அதுவுமன்றி அந்த உருமாறிய ஜலத்தை பிதாவானவர் ஒரு நாய்க்கிட, அது உடனே வலது புறத்தில் ஒருவித வலி கண்டு இறந்ததாம். அப்பா, இதிலொரு ஆச்சரிய மிருக்கின்றது. இரண்டு வருடங்களுக்கு முன் என் கைக்குழந்தையும் வலது பக்கத்தில் ஒருவித வலி கண்டிறந்தது. அது இறந்தது போலவே இந்நாயும் இறந்ததாக என் தங்கை எனக்குக் கூறினாள்.

**ஜெ.** என்ன! உம்முடைய கைக்குழந்தையா?

**ஏ.** ஆம், அப்பா! அப்பா! மற்றவைகளையெல்லாம் கேட்ட நீ இதையும் கேள். இவ்வாறு திடீரென்று வலிகண்ட குழந்தை இறந்ததுமன்றி அன்றிரவு அரண்மனையினின்றும் அப்பிரேதம் காணமற் போய்விட்டது. பிரேதத்தை யாராவது திருடுவார்களோ—? அப்பா! என்ன? என்ன?

**ஜெ.** ஆகா! சந்தேகமேன்——குழந்தையென்றும் பார்க்கலாகாதா! —மூன்றுவதோ!——இப்பொழுது நன்றாய் எல்லாம் விளங்குகின்றது! சௌரியகுமாரா!

**ஏ.** என்ன சௌரிய குமாரனைப்பற்றி?——என்ன அப்பா யோசிக்கின்றாய்?—அப்பா நீ யார்?

**ஜெ.** (தனக்குள்) காலம் வந்து விட்டது. (ஏமாங்க அரசே அந்த விஷத்தை உம்முடைய பாத்திரத்தி விட்டிருக்கக் கூடும் என்று நினைக்கின்றீர்?

**ஏ.** அப்பா! அதுதானே தெரியவில்லை எனக்கு; நா த்து முதல் இது வரையில் ஒருவருக்கும் மனதறி செய்யவில்லையே! எனக்குப் பிறரேன் தீங்கு வேண்டும்? உனக்கென்ன தோற்றுகின்றது பற்றி? உனக்கு ஏதாவது தெரியுமா?

ஜெ. ஏமாங்கதராஜனே, நான் இப்பொழுது உம்மிடம் சொல்லத் தடையில்லை. ஆயினும் அதற்குக்காரணம் கேளாத பட்சத்தில் கூறுகிறேன், என்ன சொல்லுகின்றீர் ?

ஏ. அப்படியே ஆகட்டும், யார் செய்தது தெரியுமா உனக்கு?

ஜெ, உம்முடைய கைக்குழந்தைக்கு விஷங் கொடுத்துக் கொன்று அதன் பிரேதத்தை அபகரித்துச் சென்றவனும், உமக்கு விஷங்கொடுத்துக் கொல்ல முயன்றவனும்—உமது தம்பியாகிய சௌரியகுமாரனே!

ஏ. என்ன! சௌரிய குமாரனா!

ஜெ. ஆம்—ஆச்சரியமாயிருக்கிறதோ உமக்கு ?

ஏ, அப்பா! நீ யேதோ தெரியாமையினால் கூறுகின்றாய். என்னுடைய தம்பி ஒரு காலும் இதைக் கனவிலும் நினைத்திருக்கமாட்டான். அவன் என் குழந்தை இறந்தபொழுது துக்கித்தது சுவாமிக்கே தெரியும். அதன் பிரேதத்தை க்ஷணமேனும் விட்டுப்பிரிய மனம்வரவில்லையென்று அதன் பக்கத்திலேயே இருந்தழுததைப் பார்த்திருப்பாயாயின் இவ்வாறு ஒருகாலும் நீ கூறமாட்டாய். அதுவுமன்றி என் பிதாவின் கோபத்தைத்தணிக்க அவன் முயன்றது கொஞ்சமல்லவே! என்னுடைய உடன்பிறந்தானும் எனக்காக அவ்வளவு பாடுபட்டிருக்க மாட்டானே! அப்பா, இந்த தவறான எண்ணத்தை விட்டுவிடு. நீ ஏதோ—

ஜெ. சரிதான், அப்படியே இருக்கட்டும். ஒரு காலம் வரும், அப்பொழுது உமக்கு இதன் உண்மையைக் காட்டுகிறேன். அதிருக்கட்டும், அரசே உமக்கு புஷ்பபுரிக்குப் போய் முன்போல் பிதாமுதலியோருடன் சுகமாய் வாழ்ந்திருக்க வேண்டுமென்று விருப்பமில்லையோ ?

ஏ. அப்பா! நீ இதைக் கேட்பது எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. இதைவிட எனக்கின்னும் இவ்வுலகில் சிலகாலம் உயிருடன் வாழ்ந்திருக்க விருப்பமில்லையோவென்று கேட்டிருக்கலாம். அப்பா, என் கண்ணுக்கொப்பாய என் அருமைப் புதல்வன் பாலசூரியனையும் என் மனைவி சௌமாலினியையும் நான் சீக்கிரம் காணாவிட்டால் எனதுயிர் நிற்பது கடினம்.

ஜெ. அரசே, உம்முடைய கோரிக்கையை நான் நிறைவேற்றுகின்றேன்; ஆனால் நான் சொல்லுகிறபடி காரணமொன்றும் வினவாமல் செய்வீரா நீர் ?

ஏ. அப்பா, எப்பொழுது நீ எனதுயிரைக்காப்பாற்றினயோ அப்பொழுதே நான் உனக்கடிமையாகி விட்டேன். உன் சொற்படி நான் நடவாமற் பேவேனே! எப்படியாவது நான் எனது பெண்சாதிபிள்ளையையும் தந்தை தாயாரையும் பார்த்தாற் போதும். ஆனல், உன்னல் என்ன முடியும்? அதிருக்கட்டும், அப்பா, இவ்வளவெல்லாம் கேட்டுக் கொண்டு வந்த நீ இன்னுனென்று எனக்குக் கூறவில்லையே, அப்பா, நீ யார்?

ஜெ. (தனக்குள்) நான்!—நான்!—சாம்பிணம்—நான் இக்காட்டிலுள்ள கள்வர்களுக்கெல்லாம் தலைவன்.

நாயனர் வயத்தான் முதலிய கள்வரெல்லாரும் திரும்பிவருகிறர்கள்.

ஜெ. நாயனர், பூஜையெல்லாம் சரியாக நிறைவேறிற்ற?

நா. எல்லாம் தங்களுடைய கருணையினல் சரியாக ஆயிற்று. இதோ பிரசாதம். [புஷ்ப முதலியவற்றைக் கொடுக்கின்றன்.] அடே! கருப்பண்ணசாமி அருளினல் நம்முடைய சுவாமிக்கு சகல நன்மையு முண்டாகக் கடவது!

எல். ஜெய!

நா. நமக்கெல்லாம் க்ஷேமமும் ஐஸ்வரியமும் கிடைக்கக் கடவது!

எல். ஜெய!

நா. நம்முடைய பகைவரெல்லாம் அழியக்கடவது!

எல். ஜெய!

வ. நம்பளுக்கெல்லாம் ரொம்ப ஆடும் தேங்காயும் கெடைக்கக் கடவது! ஜெய!— அடெ ஜெய சொல்லுங்கடா, தேங்காயும் ஆடும் திண்ணூட்டு வல்லே?

ஜெ. நாயனர், எல்லோரும் வந்து இப்படி என் எதிராக நில்லுங்கள். நான் இதுவரையில் உங்களுக்குத் தலைவனக இருந்தேனல்லவா? இப்பொழுது எனக்கு தேச சஞ்சாரம் செய்து ஆங்காங்குள்ள க்ஷேத்திரங்கள் முதலியவைகளைப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்று ஒரு ஆசையுண்டாயிருக்கின்றது. ஆகவே நான் போய்த் திரும்பி வருமளவும் இதோ இருக்கும்படியான என் பிராண சிநேகிதரை உங்களுக்குத் தலைவனக ஏற்படுத்துகின்றேன். தேசசஞ்சாரம் முடிந்து நான் திரும்பி வருமளவும் இவரே உமது தலைவர். (தானணிந்திருந்த முடியை ஏமாங்கதன் தலையில் தரிக்கின்றன்.)

ஏ. அப்பா! இந்தவேலை என்னத்திற்கு எனக்கு? வேண்டாம்!

**ஜெ.** ஐயனே, சற்று முன்பாக என்சொற்படி நடக்கின்றேன் என்றீரே இதுதானோ? இதை ஏற்றுக்கொள்ளும், பிறகு உமக்கு எல்லாம் விளங்கச்சொல்கின்றேன்.

**கோ.** இத்தனி காலம் உங்கீழ் இருந்தோம். இப்போ நீங்க பூட்டைங்கண்ணு நாங்களும் உங்களோடு வர்ரோம், நீங்க பூட்டாக்கா அப்புறம்—

**மற்.** ஆமாம் சாமி. ஆமாம் சாமி.

**ஜெ.** அடே! நான் சொன்னபடி செய்யுங்கள். நான் அடிக்கடி இங்குவந்து உங்களுடைய க்ஷேமத்தை விசாரித்துக் கொண்டே இருப்பேன், ஒன்றும் பயப்படவேண்டாம். இது வரையில் எப்படி என் சொற்படி நடந்து வந்தீர்களோ அது போலவே இனி இவர் சொற்படி நடக்க வேண்டும் தெரியுமா?

**எல்.** நீங்க சொல்லரபடி செய்ரோம் சாமி!

**ஜெ.** நாயனர், நான் மேலைக்குகைக்குச் செல்கின்றேன். நீ இன்னும் மற்ற கள்வரையெல்லாம் அழைத்துக் கொண்டு அங்கு வந்து சேர். ஐயனே, வாரும் செல்வோம். உம்முடன் இவர்களைப் பற்றி சில விஷயங்கள் சொல்லவேண்டும். சொல்லுகின்றேன் வாரும். அதுவுமன்றி நீர் மிகவும் பசியுற்றிருக்கின்றீர். வாரும் போவோம். [ஏமாங்கதனை அழைத்துச் செல்கின்ருன்.]

**இ.** அடே! இதென்ன இது! நம்ப சாமி எங்கேயோ பூட்ராராம் வேறொரு சாமியை வைச்சூட்டுப் போராராமே! இந்த சாமியெ பார்த்தாலும் நல்லவராட்டந் தான் இருக்குதுரா. ஆனலும் இவரெ பார்த்தா தைரியசாலியாயில்லேடா!

**ம.** இல்லெடா, நம்ப சாமி சீக்கிரமா வந்துடுவாரு.

**கோ.** அதுவமில்லாமே அடிக்கடி வர்ரேன் இண்ணுரே.

**நா.** ஆம் ஆம். சீக்கிரம் வாருங்கள் போவோம். அடெ அந்தர் டப்பு எங்கேடா?

**வ.** அடே நம்ப பொலிபோட்ட எடத்திலே ஈச்சங்கள்ளெ வச்சூட்டு வந்தூட்டேண்டா!

**இ.** இல்லேடா, அத்தை நான் வரும்போது பார்த்தேன் காணேமே.

**வ.** ஒருவேளெ அந்தர்டப்பு குடிச்சூட்டானே?

**இ.** ஆமாண்டா ஆமாண்டா! இதோ குடிச்சூட்டு வுய்ந்துகினு வாராம்பாரு. [அந்தர்டப்பு குடித்துவிட்டு விழுந்து கொண்டு வருகிருன்.]

**அ.** அடே வவுத்தான்! — நான் குரிசூட்டேண்டா ஈசங் கல்லு !—அட தொப்பே !

**வ.** ஐயோ! ஒழிஞ்சுது. வாயிலே மண்ணெ போட்டான். அதுக்குத்தான் நான் அப்பவே குடிச்சுடணுமிண்ணேன். கேட்டைங்களா !

**நா.** அடே நேரமாய்விட்டது, போவோம். அடே இவனை இப்படியே பிடித்துக் கொண்டுவாருங்கள். [அந்தர்டப்பு வை இழுத்துக்கொண்டு எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது

---

## இரண்டாவது காட்சி

இடம் :— புஷ்பபுரியில் அரண்மனையிலோர் அந்தரங்கமான அறை. சௌரியகுமாரன் கள்ள அறையை யுடைய ஒரு மேஜையின் முன்பாக, கையிலோர் மருந்துக்குப்பியுடன் நிற்கின்றான்.

**சௌ.** பலாயனனுக்கு நேற்றைத்தினம் பாலில்கலந்து கொடுத்தது போதுமா போதாதா ? போதுமெனத் தோற்றுகின்றது. அவனால் நமக்கு இன்னும் சில காரியங்கள் ஆக வேண்டியிருக்கின்றன, ஆகவே அவன் இன்னும் சில தினங்கள் பொறுத்திருப்பதே நலம். [குப்பியை மேஜையில் வைத்து மூடிவிட்டு ஒருபுறமாக வருகிறான்.] சீ ! ஒன்றின் மேலொன்றாய் வந்து கொண்டிருக்கின்றனவே ! இதனுடன் என் கவலைகளெல்லாம் முடியும் என்று நினைத்திருக்க முன்பிருந்ததை விட அதிகரித்தனவே யொழிய குறைந்தபாடில்லை. ஒன்றை நினைக்க ஒன்றாய் முடிகின்றது. அன்றைத்தினம் பிதா மறுபடியும் ஜலம் கேளாமலிருக்கலாகாதா ? அல்லது ஏமாங்கதனாவது அதற்கு முன் அவ்விஷத்தை அருந்தியிருக்கலாகாதா ? இந்த சந்தர்ப்பத்தில் பாலசூரியன் என்கையினின்றும் இரண்டாம் முறை தப்பித்துக் கொண்டான் ; ஆயினும் விட்டேனா அவனை ! என்ன சங்கடங்கள் ! இன்னும் நான் அதைரியப் படுவதற்கொன்றும் நியாயமில்லை. நான் ஏவியிருக்கின்ற தூதர்கள், எப்படியும் ஏமாங்கதனை விடமாட்டார்கள் ; ஒருகால் அவர்கள் கையினின்றும் அவன் தப்புவானாயின் நான் இந்த ஏழுதினங்களாக அவனை ஏமாற்றி இங்கேயே இருக்கச் செய்த கஷ்டமெல்லாம்

வீணாகிவிடும். ஏமாங்கதன் இறந்தான் என்று என் செவியினால் நான் கேட்குமளவும் எனக்கு இரவெல்லாம் பகல்தான்! இதைக் கேட்டபின்பே நான்மேல் நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றி யோசிக்கவேண்டும்.

*கதவின் பக்கமாய் காஞ்சேயன் வந்து நிற்கிறான்.*

**சௌரி.** காஞ்சேயா, விடங்கனெங்கே?

**கா.** அவனைக் காலைமுதல் காணோம். அரசே, தம்முடன் கண்டு பேசுவதற்காக சௌமாலினிதேவியும் பாலசூரியரும் வெளி வாயிலில் வந்து நிற்கிறார்கள்.

**சௌரி.** உள்ளே வரச்சொல். இதென்ன சங்கடம்! [விரைவில் மேஜையைப் பூட்டிவிட்டு தன் ஆசனத்திற்கு வருகிறான்.] நான் மிகவும் வருத்த முற்றவனைப்போல் வேஷம்போட வேண்டும். நான் மேற்கொண்ட வேலை என்னை ஒவ்வொன்று செய்யச்சொல்கின்றது!

*பாலசூரியன் சௌமாலினியை அழைத்து வருகிறான்.*

**சௌரி.** அம்மணி! தாங்கள் ஏது இவ்வளவு பிரயாசம் எடுத்துக் கொண்டிங்கு வந்தது? அப்படி என்னுடன் ஏதாவது பேசவேண்டியிருந்தால் எனக்கொரு வார்த்தை சொல்லியனுப்பினால் நான் தங்களிடம் வரக்காத்துக் கொண்டிருக்கிறேன். தங்களுக்கு இவ்வளவு கஷ்டம் கொடுத்ததற்காக என்னை மன்னிக்கவேண்டும். என்ன சமாசாரம்? பாலசூரியா, என்ன சமாசாரம்?

**பா.** என்ன சமாசாரம்!—நான் பிரயோஜனமில்லை என்று எவ்வளவு தடுத்தும் கேளாது என் பிதாவைப் பற்றி உம்மிடம் பேச என் அன்னை வந்திருக்கிறார்கள்.

**சௌமா.** ராஜகுமாரா! இடுக்கணுற்ற காலையில்உதவுவாரே உற்றாரெனப்படுவார்! இந்த சந்தர்ப்பத்தில் எமக்குதவுவார் உம்மையன்றி வேறு ஒருவருமில்லை. உம்மாலேயே எங்கள் குறைகள் தீர்க்கப்படவேண்டும். அப்பா! உமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை, என் பிராணநாதர் ஒரு அபராதமும் நினைத்தவரல்லவென்பது நீர் அறியாத விஷயமல்ல. மாமா அவர்கள் வீணாக அவர் மீது கோபம் கொண்டு இந் நாட்டை விட்டுப் போம்படி கொடுமையான கட்டளையிட்டிருக்கின்றது நீர் அறிந்த விஷயமே. தாம் எப்படியாவது மாமா அவர்களிடம் சொல்லி இக் கடூரமான கட்டளையை மீட்டுக்கொள்ளும்படிச் செய்து என்பர்த்தாவுடன் என்னைச் சேர்ப்பிப்பது தம்முடைய

கடமை, பாலசூரியன் தன் பிதாவை நினைந்து வருந்தி வருந்திக் குன்றிப் போகின்றான். எப்படியாவது தாங்கள் தயை கூர்ந்து எமக்கிவ்வுதவி செய்யவேண்டும். உம்மையே நம்பியிருக்கின்றேன். நான் உம்மை மிகவும் வேண்டிக் கொள்ளுகின்றேன். நான் உமக்கு மூத்தவளாகையால் உமது பாதத்தில் வீழ்ந்து வேண்டாத குறைதான். [முகத்தை முன்றானையால் மூடித் தேம்பி அழுகிறாள்.]

**சௌரி.** அம்மணி! வருந்தவேண்டாம். வருந்தவேண்டாம் நான் என்னால் ஆனமட்டும் பிதாவுக்குச் சொல்லிப்பார்த்தேன், அவர் ஒரே பிடிவாதமாயிருக்கின்றார். ஆயினும் தாம் அதைரியப்பட வேண்டாம். நாளாவர்த்தியில் பிதாவினுடைய கோபம் தணியும்; அப்பொழுது நாம் சொல்லுவோமாகில் கேட்பார். இப்பொழுது சொல்வதிற் பயனில்லையென்று தோற்றுகிறதம்மணி.

**சௌமா.** அப்பா! அதற்கு நான் எத்தனை காலம் கார்க்க வேண்டுமோ! என் பிராணநாதரை விட்டுப்பிரிந்து நான் இங்கெப்படி உயிர் வாழ்ந்திருப்பது? அவர் இப்பொழுது எங்கு உழல்கின்றாரோ! என்ன சங்கடங்களை அனுபவிக்கிறாரோ! என்னுடன் கடைசி முறை சொல்லி விட்டும் போகவில்லையே! ராஜகுமாரா! மாமா அவர்கள் முன்பிட்ட கட்டளையை மீட்டுக்கொள்ளாமற் போனாற் போகின்றது, எங்களையேன் இவ்வரண்மனையை விட்டுப் போகக்கூடாது என்று காவலிலமைத்திருக்கின்றார்? நாங்கள் என்ன தப்பிதம் செய்தோம் அவருக்கு? அப்பா! குலமகளைத் தன் கொழுனனிடமிருந்து இவ்வாறு பிரித்துவைப்பது உமக்கு நியாயமென்று தோற்றுகின்றதா? இதனால் நமது குலத்திற்கு அபகீர்த்தி வருமன்றோ? அப்பா! இதையாவது செய்யும். எப்படியாவது மாமாவைக் கேட்டு நாங்களிருவரும் இவ்வரண்யை விட்டு என் பிராணநாதரிருக்குமிடம் தேடிச்சென்று அவருடனிருக்க உத்திரவு கொடுக்கும்படியாகக் கேளும். இது எங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்ததாகும். உமக்கு மிகவும் புண்ணியமுண்டு.—

**சௌரி.** அம்மா அழவேண்டாம். இதற்கு எப்படியும் பிதா இசைவாரென்று நினைக்கிறேன். இதோ நான் பிதாவிடம் போய் பேசுகின்றேன். இப்பொழுது தமயன் இருக்குமிடம் உமக்குத் தெரியுமா?

**சௌமா.** தெரியாது. எப்படியாவது சுற்றித் தேடிக் கண்டு பிடிக்கின்றோம்.

**சௌரி.** பாலசூரியா உனக்குத் தெரியுமா ?

**பா.** ஏன் ! உமக்குத் தெரியாது ?

**சௌரி.** தெரியாது !

**பா.** சிற்றப்பா! வேண்டாம் கடைசிமுறைச் சொல்கின்றேன். உண்மையை மஹாராஜாவிடம் கூறி என் பிதாவின்மீது அவர் கொண்டிருக்கும் கோபத்தைத் தணியும். இதற் கெல்லாம் நீர் தான் ஏதோ காரணமாயிருக்கின்றீர் என்று நான் உறுதியாக நம்புகிறேன். என் பிதாவின் மீது சிறிதேனும் குற்றமில்லை. வேண்டாம்! வேண் டாம் ! எங்களுக்குத் தீமைசெய்து நீர் நன்மையடைய மாட்டீர் ! தன் வினை தன்னைச்சுடும். சர்வ சாட்சியாக ஈசனொருவனிருக்கிறான், அவனுக்குப் பொதுவாக நாம் நடக்கவேண்டும். அவனுக்கு நாம் செய்யும் நன்மை தீமையெல்லாம் தெரியும், நம்முடைய செய்கைகளையெல் லாம் வேறொருவரும் அறியாவிட்டாலும் அவனறிவான். அவன் எப்படியும் நம்மை இவ்வுலகத்திலாவது வேறு உலகத்திலாவது தண்டிப்பான். நம்முடைய செய்கை களுக்கெல்லாம் அவனுக்கு நாம் ஒரு காலத்தில் உத்திரவு சொல்லவேண்டி வரும்.

**சௌரி.** அப்பா ! நீ சொல்வது எனக்கொன்றும் புலப்பட வில்லையே !

**பா.** இப்பொழுது புலப்படாது, ஒரு காலம் வரும் அப் பொழுது நன்றாய்ப்புலப்படும்—அம்மணி! நான் முன்பே சொன்னேனே ! இப்பொழுது இங்கு வந்து பேசினதி னால் என்ன பயனைப் பெற்றீர் ? எல்லாம் நம்முடைய விதியின்படி ஆகின்றது. நாம் இந்த சங்கடங்களையெல் லாம் அனுபவிக்கவேண்டுமென்று பிராப்தமிருந்தால் அது நம்மைவிடுமோ ! இவர்களையெல்லாம் வேண்டுவதி னால் என்ன பிரயோஜனம்? நம்முடைய விதியை மாற்ற இவர்களால் முடியுமோ? இல்லை நாம் சீக்கிரத்தில் சுகமடைவோமென்று நம்முடைய தலையில் எழுதியிருந் தால் அதைத் தடுக்க இவர்களால் முடியுமோ ? எல்லாம் ஈசன்செயல். அவனாலன்றி பேதை மனிதர்களால் என்ன முடியும் ? அவனை நம்பி அவனேகதியென்றிருக்க வேண் டும். அவனைவிட நம்முடைய ஆபத்துகளில் நமக்கு

உதவுவார் ஒருவருளரோ ? நாம் திரிகரண சுத்தியா யிருக்க வேண்டும், மற்றவைகளெல்லாம் அவன் செயலேயென்று நன்மை நேர்ந்த போதிலும் தீமை நேர்ந்த போதிலும் யாதும் அவன் திருவுள்ளமென்று பொறுத்திருக்க வேண்டும். குற்றமற்ற மனமுடையவ ராய் அவனை நம்பினவர்களுக்கு அவன் உதவிசெய்யாமற் போகமாட்டான், தீமை செய்பவர்களைத் தண்டியா மலும் போகமாட்டான். தன்வினை தன்னைச் சுடாமற் போகாது ; வாரும் போவோம் ; இங்கு நாமினி இருப் பானேன் ? இவரை வேண்டுவதை விட சுவாமியைத் துதித்தாலும் சற்றுப் பிரயோஜன முண்டு. சிற்றப்பா ! தன்வினை தன்னைச்சுடும், மறவாதீர் அதனை (சௌமாலினி யை அழைத்துக்கொண்டு போகிருன்.)

**சௌரி.** தன்வினை தன்னைச்சுடும் ! சுட்டபொழுது பார்த்துக் கொள்ளுவோம். இந்த பாலசூரியன் ஏதோ சந்தேகிக் கிருன்—ஆயினும் இவனுக்கு உண்மை தெரியப்போகின் றதா ? அதில்லை !—உம் !—இவனுக்கு நாம் சீக்கிரம் வழி தேடவேண்டும். பாலசூரியா ! இரண்டு முறை தப்பினய், மூன்றும் முறையும் தப்பித்துக் கொள்ளுகின்றுயோ பார்ப்போம் !

**சுசங்கதை வருகிருள்.**

சுசங்கதா ! நீயும் வந்தாயா ! என்ன சமாசாரம் ?

**சு.** இப்பொழுது சௌமாலினியும் பாலசூரியனும் இங்கு வந்திருந்தார்களா ?

**சௌரி.** ஆம், வந்திருந்தார்கள்.

**சு.** என்ன கேட்டார்கள் உன்னை ?

**சௌரி.** அரண்மனையை விட்டு வெளியேபோகவேண்டுமாம்.

**சு.** அதற்கு நீ என்ன சொன்னய் ?

**சௌரி.** நான் என்ன சொல்வது ? உனக்குத்தான் தெரியுமே !

**சு.** சீ ! சீ ! அப்படியல்ல. அவர்கள் என்னிடமும் முறை யிட்டார்கள் ; அதைக் கேட்கவே நானும் இங்கு வந் தேன். அப்பா ! உன் எண்ணத்தைத்தான் நிறைவேற் றிக் கொண்டாயே ! ஏமாங்கதனைக் கொல்லாவிட் டாலும் நாட்டைவிட்டுத் துரத்திவிட்டாய். எப்படியும் பிதாவின் பிற்காலம் உனக்குத்தான் பட்டம் கிடைக்கப் போகின்றது. இனிமேல் அனுதியான சௌமாலினியை யும் பாலசூரியனையும் நீவருத்துவானேன் ? பெண்ணென் றும் பார்க்கவேண்டாமா ? அதிலும் **பூரண கர்ப்பிணி,**

எட்டு மாதம்! இந்த துக்கத்தில் அக்கருவுக்கு ஏதாவது கெடுதி நேரிட்டாலும் நேரிடும். அவளிஷ்டப்படி அவளை அனுப்பிவிடுகின்றதுதானே?

**சௌரி.** நான் என்ன செய்வது?

**சு.** நீ என்ன செய்வது! ஐயோ பாவம்! நீ தானே அம்மாளிடம் கூறி பிதாவுக்குப் போதிக்கச் செய்து அவர்களை அரண்மனையை விட்டு வெளியே போகாதபடி காவலிலிருக்கச் செய்தாய். நீ இப்பொழுது இஷ்டப்பட்டால் முடியாமற்போகுமா இக்காரியம்?

**சௌரி.** ஆமாம், பூரணகர்ப்பிணி ஆயிற்றே இப்பொழுதெங்கே வெளியிற் செல்வது?

**சு.** அதெற்கெல்லாம் நான் தக்க ஏற்பாடு செய்கின்றேன்; என்ன அப்பா, பழி பாவத்திற்கஞ்ச வேண்டாமா? உனக்கொரு குற்றமும் செய்யாத ஒரு பேதை மனதை நீ நோகச் செய்யலாமா? வேண்டாம்—என்ன சொல்லுகின்றாய்?

**சௌரி.** சுசங்கதா, பூரணகர்ப்பிணி வெளியிற் செல்லக்கூடாது. இங்கேயே இருப்பாளாகில் சீக்கிரம் அவளுடைய தொந்தரவையெல்லாம் நீக்கிவிடுகின்றேன்.

**சு.** சீ! சீ! பாதகா! இதுவரையில் நீ செய்த துர்நடத்தையெல்லாம் போதாதா? ஒரு பெண்கொலையும் வேண்டுமா? இப்படியா எண்ணியிருக்கின்றாய்? இப்பொழுது நான் பிதாவிடம் சென்று எல்லா உண்மையையும் கூறுகின்றேன்.

**சௌரி.** என்ன என்ன! சுசங்கதா! நில் போகாதே!

**சு.** தொடாதே என்னை! நான் பொறுத்ததெல்லாம் போதும். நியாயமனியாயமில்லையா! இதோ நான் போய் சொல்லுகின்றேன். அப்படியா சமாசாரம்!

**சௌரி.** சுசங்கதா! நான் இறந்து பிணமாய்க்கிடப்பதைப் பார்த்து சந்தோஷிக்க வேண்டுமென்றிருந்தால் உன்னிஷ்டப்படி செய். நீ பிதாவிடம் கூறுவாயாயின் அவர் என்னை எப்படியும்கொன்றுவிடும்படி கட்டளையிடுவார். அதைக்காண நீ விரும்புவாயாயின் போ, போ, போ.

**சு.** **(கண்ணீருடன்)** அடபாபி! எப்பொழுது பார்த்தாலும் இந்த இழவு ஒன்றைக் கூறிக் கூறித்தானே காலத்தைக் கழித்து வருகின்றாய். நீ எக்கேடு கெட்டாவது போ. உன் உயிருக்கே நீ உலை தேடுகின்றாயேயொழிய வேறொன்றுமில்லை. ஆயினும்சௌமாலினிக்குஏதாவது

கெடுதி நினைப்பாயாயின் உடனே நான் பிதாவிடம் எல்லா உண்மையையும் கூறிவிடுவேன். அதற்குச் சந்தேகமில்லை. என்ன சொல்லுகின்றாய்?—உன்னிடம் இங்கு பேசிக்கொண்டிருப்பதை விட அவளிடம் போய் அவளுக்குத் தேறுதல் சொல்லினாலும் சிறிது புண்ணியமுண்டு. நான் சொன்னது மாத்திரம் நன்றாய் ஞாபகமிருக்கட்டும். (போகிறாள்)

**சௌரி.** இதென்ன இழவு! தொந்தரவின்மீது தொந்தரவாய் வருகின்றது! இந்த சங்கடத்திற்கென்ன செய்வது?—(மேஜையின் மீது வைத்திருக்கும் மணி அடிக்கிறது) அப்பா! ஏமாங்கதன் இறந்தான்! (விரைந்து எழுந்திருக்கின்றான்.)

**பலாயனன் விரைந்து வருகின்றான்.**

**சௌரி.** இறந்தானா ஏமாங்கதன்?

**ப.** பிறந்தான் ஏமாங்கதன்! தப்பித்துக்கொண்டான்!

**சௌரி.** ஆ! தப்பித்துக்கொண்டானா?

**ப.** ஆம்! புலியூர்வரையில் சங்கனும் விடங்கனும் பின்தொடர்ந்து சென்றார்களாம்; அங்கே சாயங்காலம் ஒரு குடியானவன் வீட்டில் நுழையக்கண்டு அன்றிரவு கொன்றுவிடத் தீர்மானித்து இருட்டியவுடன் உள்ளே சென்று பார்க்க, இதற்குள் எங்கேயோ போய்விட்டானாம். பிறகு எங்குதேடியும் அவன் சென்ற வழி தெரியாது திரும்பி வந்துவிட்டனர்.

**சௌரி.** கழுதைகள்! சும்மாவாகவா திரும்பி வந்துவிட்டார்கள்? அக்குடியானவனைப் பிடித்துக் கேட்கின்றது தானே?

**ப.** கேட்டார்களாம், அவன் ஒன்றும் தெரியாதென்கிறானாம் என்ன பயமுறுத்தியும்.

**சௌரி.** ஒருவேளை புலியூருக்கடுத்த தூமகாரண்யத்திற்குப் போய் ஒளிந்திருந்தாலுமிருக்கலாம். பலாயனா! அந்தக் கழுதைகளை உடனே புறப்பட்டு மாறுவேடம் பூண்டு தூமகாரண்யத்திற் போய்த்தேடச் செய். ஏமாங்கதனைக் கொன்றாலொழிய திரும்பிவரக்கூடாதென்று நான் கட்டளையிட்டதாகச் சொல். அப்படித் திரும்பிவந்தால் என்ன கதி என்று அவர்களுக்கே தெரியும். உடனே புறப்படச்சொல் சீக்கிரம்.

**ப.** இதோ சொல்லுகின்றேன்—ஆயினும் அப்படியே—விட்டுவிட்டால்? பாவம் இனி அவன் நம்மை என்ன செய்யக்கூடும்? நம்முடைய காரியமோ நிறைவேறி விட்டது!

**சௌரி.** அப்படியல்ல! நான் சொன்னபடி செய்—பலாயனா என்ன உனது வலது கையில்?

**ப.** ஏதோ நேற்றைத்தினம் சாயங்கால முதல் இருந்திருந்து அங்கே ஒருவித வலிகாண்கின்றது.

**சௌரி.** அது ஒன்றுமில்லை நீ சீக்கிரம்போ. (பலாயனன் போகிறான்) நாம் கொடுத்தது தன் சொரூபத்தைக் காட்ட வாரம்பித்து விட்டாற்போலிருக்கிறது! அதிருக்கட்டும், இதென்ன பெரும் சங்கடம்! ஏமாங்கதன் தப்பித்துக் கொண்டானுமே! இனி நான் மிகவும் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். இப்பொழுது நான் கொஞ்சம் அஜாக்கிரதையா யிருப்பேனாயின் எல்லாம் கெட்டுப் போம். ஏமாங்கதன் எப்படியும் தன்னுடைய பெண்டு பிள்ளைகளைப் பெறவிரும்புவான். அவர்கள் அவனிடம் போய்ச்சேர்ந்து விடுவார்களாயின் பிறகு நமக்குக் கஷ்டம். ஆதலால் சௌமாலினியையும் பாலசூரியனையும் சிறையிலிட்டு வைக்கும்படி பிதாவுக்குப் போதிக்க அனுசூயாதேவியை ஏவவேண்டும். அந்த மட்டும் எனது மனதுக்கிசைந்த தாயார் கிடைத்தது என் பாக்கியமே! நான் இனி காலத்தை வீணிற்கழிக்கலாகாது. ஒவ்வொரு க்ஷணமும் எனக்குபயோகப்படும்: [போகிறான்.]

காட்சி முடிகிறது.

---

## மூன்றாவது காட்சி

இடம்:— ராஜ வீதியில் ஒரு வீடு.

வீதியில் ஜெயபாலன் மாறுவேடம் பூண்டு வருகிறான்.

**ஜெ.** [தனக்குள்] இவ் வீதியைக் காணுங்கால் என் மனதில் என்னென்ன ஞாபகங்கள் வருகின்றன! ஹா! [பெருமூச்சு விடுகிறான்] நாம் வந்த வேலையைப் பார்ப்போம்; அவைகளையெல்லாம் பற்றி இப்பொழுது யோசித்துப் பயனென்ன? அந்த புத்தி அப்பொழுதே இருக்கவேண்டும்—இப்படியாவது இவனைக் கைவசப்படுத்த வேண்டும். ஆயினும் இவன் சௌரியகுமாரனிடம் மிகவும் அன்யோன்யமாயிருக்கின்றான். அவனுடைய துர்ச் செய்கைகள் இவனுக்குத் தெரிந்திருந்தாலுமிருக்கும். இவனை நம்முடைய வசப்படுத்துவதெப்படி?—ஆயினும் பார்ப்போம் — [பலாயனன் வீட்டு வாயிலெதிரில் வந்து நிற்கிறான்.]

**தாரகன் வருகிறான்.**

**தா.** யார் ஐயா அது?

**ஜெ.** அப்பா, நான் ஒரு ஜோசியன். நாகர்கோயிலினின்றும் உம்முடைய எஜமானனைப் பார்க்க வந்திருக்கின்றேன். இப்பொழுது பார்க்கச் சந்தர்ப்பப்படுமா?

**தா.** ஏன் ஐயா! இப்பொழுது சந்தப்பப்படுமா படாதா என்றே ஜோசியம் பார்த்துக்கொண்டு வருகிறதுதானே?

**ஜெ.** பார்க்கலாம் எனத்தோற்றுகின்றது.

**தா.** பார்க்கமுடியாது எனத்தோற்றுகின்றது! அவருக்கு இப்பொழுது உடம்பு சவுக்கியமில்லை; ஆயினும் நான் சொல்லிப் பார்க்கிறேன். [வீட்டுக்குள்ளே போகிறான்.]

**ஜெ.** [தனக்குள்] நன்றாகக் கேட்டான் புத்திசாலி! ஜோசியர்களுடைய விபத்து இதுதான்.

**சூடாமணியும் தாரகனும் வருகிறார்கள்.**

**தா.** மருந்துசாப்பிடுகிறார். இதோவருவதாகக்கூறினார். தாம் இப்படி உட்கார்ந்திரும் [ஓர் ஆசனம்கொடுத்து விட்டு உள்ளே போகிறான்.]

**சூ.** தாங்கள் தான் நாகர்கோயில் சோசியர் போலிருக்கின்றது?

**ஜெ.** ஆமாம். [ஒரு புறமாய்] அடடா! இவனா!

**சூ.** தங்களை எங்கேயோ இதற்கு முன்பாகப் பார்த்திருக்கின்றாற் போலிருக்கின்றது?

**ஜெ.** இருக்கலாம், எனக்கும் தங்களை எங்கேயோ இதற்குமுன்பாகப் பார்த்த ஞாபகமாயிருக்கின்றது.

**சூ.** ஓ! ஒருவேளை முன்பு அட்சயவருஷத்துக் கருப்பில் எளியவர்க்கெல்லாம் ஆயிரம் ஆயிரமாக தானங்கொடுத்தேனே அப்பொழுது பார்த்திருக்கலாம்.

**ஜெ.** இருக்கலாம். [ஒருபுறமாய்] ஆரம்பித்தாயா?

**சூ.** அப்படித் தானிருக்கும். இப்பொழுது என்னை அடையாளம் கண்டு பிடித்தல் கஷ்டமாயிருக்கின்றாற் போலிருக்கிறது! சகஜந்தான். அப்பொழுது நான் போட்டுக்கொண்டிருந்த வைரக் கடுக்கன் பச்சைக்கல் முருகு முத்து மாலை மோகனமாலை விர வண்டாயம் முதலியன வெல்லா மில்லாதிருக்கின்றேனல்லவா!

**ஜெ.** ஆமாம்—பிரபுவுக்கு என்னவுடம்பு?

**சூ.** ஏதோ உடம்பில் வலியாயிருக்கிறதாம்—என் சிறு விரலில் ஒரு பதினயிரத்து முன்னூற்று எழுபத்து மூன்று

வராகன் பெறும்படியான ஒரு கெம்புமோதிரம் போட்டுக்கொண்டிருந்தேனே தங்களுக்கு ஞாபகமிருக்கின்றதா, இந்தபொன் மோதிரம் இருக்குமிடத்தில்?

ஜெ. ஆமாம் ஞாபகமிருக்கின்றது—பிரபுவுக்கு என்ன வலி என்று கூறினீர்?

சூ. இருந்திருந்து கையில் ஒரு விதமானவலி யொன்றுண்டாகின்றதாம்—உமக்குமாத்திரம் ஒருசமாசாரம் கூறுகிறேன் அதை ஒருவரிடமும் கூறவேண்டாம். அந்த மோதிரத்தை ஒருநாள் இரவு ஒருவருமறியாதபடி மகாராஜா என் வீட்டிற்கு வந்து மிகவும் வேண்டிக்கொண்டார். அவர் என்ன அதற்கு விலை கொடுக்கப் போகின்றுரா என்று தானமாகக் கொடுத்து-விட்டேன்.

ஜெ. மிகவும் சந்தோஷம்!—எந்தக்கையில் நோகின்றதாம்?

சூ. வலதுகையில். அப்புறம்—என்ன ஆச்சரியப்படுகின்றீர்? என் கையில் நான் அப்பொழுது போட்டுக்கொண்டிருந்த காப்பும் கொலுசும் எங்கே காணுமே என்று யோசிக்கின்றீரோ? அதைச் சென்ற பொங்கல் பண்டிகையில் என்னுடைய அம்பட்டனுக்குக் கொடுத்து விட்டேன்.

ஜெ. அப்படித்தான் செய்யவேண்டும். மகாப்பிரபு, தமக்கென்ன குறைவு!—இவருக்கு என்றுமுதல் இந்நோயுண்டா யிருக்கின்றது?

சூ. இரண்டுதினங்களாக இருக்கின்றதாம்—அதிருக்கட்டும் தங்களைநான் ஒருஜோசியம் கேட்கவேண்டும். பத்து வருடத்துக்கு முன் ஒருஜோசியர் சீக்கிரம் எனக்கு எண்பதுகோடி பொன் புதையலில் கிடைக்கும் என்று கூறி விட்டுப்போனார். இதைச் சொன்னதற்காக அவருக்கு நான் ஆயிரம் பொன்கொடுத்தேன். அந்தப் புதையல் எனக்கு எங்கேகிடைக்குமென்று தாங்கள் ஜோசியம் பார்த்துச் சொல்லவேண்டும். உமக்கும் ஏதாவது தருகிறேன்.

ஜெ. இவ்வளவு சீக்கிரத்தில் கூறமுடியுமா? நான் தங்களுடைய கிரகத்திற்கு நாளைத்தினம் காலைவருகின்றேன், அப்பொழுது எல்லாம் பார்த்துக் கூறுகின்றேன்.

சூ. ஆம்! அதுதான் சரி, நான்வருகின்றேன் மறக்கவேண்டாம், என்மாளிகை தெரியுமே உமக்கு? பக்கத்து வீதியில் வாசற்படி இடிந்தவீடு நம்முடையது. பாருங்கள்! நாம் எத்தனை முறை அதைச் சரிப்படுத்தியும்

தினம் அநேக யாசகர்கள் வந்து நுழைவதினால் எல்லாம் இடிந்து போகின்றது நம்முடைய வீட்டில். நான் வருகின்றேன். [போகிறான்]

ஜெ. அப்படியே—இப்படியும் ஒரு ஜன்மமிருக்குமா!—ஒரு சந்தோஷம்! இவனே நமது மாறுவேடத்தைக் கண்டுபிடிக்கா விட்டால் வேறுயார் கண்டுபிடிக்கப்போகிறார்கள் அதிருக்கட்டும், இதென்ன! எனக்கேதோ புத்தியில் ஒரு சந்தேகம் தோன்றுகின்றது—இப்படியிருக்குமா? ஆயினும் என் புத்தியிற்படுவது இதுவரையிலும் பொய்த்ததில்லை. பலாயனனுக்கு ஏன் அதைக் கொடுக்கவேண்டும்? ஒருவேளை இருவரும் சச்சரவிட்டுக் கொண்டார்களா? எல்லாம் நேரிற்கண்டால் தெரிய வருகின்றது—ஹா! இவ்வளவு பாபத்திற்கும் ஆதி கர்த்தா நான்தானே!

பலாயனன் வருகிறான்.

ப. வாருங்கள் உட்காருங்கள்.

ஜெ. (ஒருபுறமாய்) சரிதான்! சந்தேகமில்லை. நான்காவது!—ஐயோ பாவம்—இன்னும் எத்தனைபெயருக்குத்தான் கொடுத்திருக்கின்றானோ! நாம்வந்த வேலை நிறைவேறி விட்டது!

ப. தாங்கள் எப்போது நாகர்கோயிலினின்றும் வந்தீர்? இங்கு இதுவரையில் வேறுயாரையாவது பார்த்தீங்களா?

ஜெ. நேற்றைத்தினம் சாயங்காலம் நான் இங்குவந்தேன். தங்களை முதலில் பார்த்து விட்டுப்போகவேண்டுமென்று தம்மிடம் வந்தேன்,

ப. சந்தோஷம்—முதலியேயே உங்களுக்கு ஒரு விஷயம் கூறி விடுகின்றேன். நான் சிறுவயதாயிருக்கும் பொழுது ஜோசியத்தில் மிகவும் நம்பியிருந்தேன், வரவர எனக்கு அந்நம்பிக்கை குறைந்துகொண்டே வருகின்றது.

ஜெ. அப்படியல்ல, அதில் ஏதாவது உண்மையிராமற் போகாது.

ப. அப்படியா!—நீர் இன்னும் எத்தனை வருஷம் உயிரோடிருப்பீர் சொல்லும்?

ஜெ. சாதாரணமாக மனிதனுடைய ஆயுளைப்பற்றி மாத்திரம் ஜோசியம் பார்த்துக் கூறக்கூடாது என்று ஒருபிரமாணமுண்டு, ஆயினும் என்னுயுளைக் கூறத்தடையில்லை. நான் இன்னும் இருபத்தாறு நாளைக்குள் இறக்க வேண்டுமென்று தோற்றுகின்றது.

ப. என்ன! அது எனப்படி? உமக்கென்ன உடம்பு?

ஜெ. உடம்பொன்றுமில்லை, அது என் தலைவிதி?

ப. என்ன! தற்கொலைபுரியப்போகின்றீரா என்ன?

ஜெ. இல்லை, என் தலைவிதி அது.

ப. என்ன ஆச்சரியம்! நான் இன்னும் எத்தனை வருடங்கள் உயிரோடிருப்பேன் சொல்லும்?

ஜெ. ஐயா! நான் முன்பே கூறினேனே இதைமாத்திரம் தாங்கள் கேட்கலாகாது. எப்படியிருக்குமோ, ஒரு வேளை ஏதாவது கெடுதியாயிருந்தால் பிறகு நான் பொய்பேச வேண்டிவரும்.

ப. அப்படியல்ல. எப்படியிருந்த போதிலும் உண்மையைக் கூறும். நான் இதற்கெல்லாம் அஞ்சுபவனல்ல. எத்தனை காலமிருந்த போதிலும் நாமெல்லாம் ஒருநாள் இறக்க வேண்டியதுதானே; என்னுடைய ஜாதகத்தைக் கொண்டு வரவா?

ஜெ. வேண்டாம். நான் முகத்தைப்பார்த்துக் கூறுவது வழக்கம். தாங்கள் சற்று தயை செய்து என் எதிராக நில்லுங்கள் (பலாயனன்எழுந்து நிற்கஜெயபாலன் அவன் நாடியைப் பரிசோதிக்கிறன்) சரி!—உட்காரலாம். நான் உமக்கு இன்னொரு வேளை கூறுகிறேன்—மன்னிக்கவேண்டும்.—நான் வருகின்றேன்.

ப. (ஜெயபாலன் கையைப்பிடித்துக்கொண்டு) இதென்ன! நில்லும். ஐயா என்ன சமாசாரம்? நீர் ஏதோ என்னிடம் கூற இஷ்டமில்லாது இவ்வாறு போக்குச் சொல்லுகின்றாற் போலிருக்கின்றதே!

ஜெ. உமக்கு நான் இதைக்கூறுதிருத்தலே நலம். இதைவிட வேறு எதையாவது கேளும்.

ப. அப்படியல்ல, நான் பயங்காளியன்று; நீர் சும்மாசொல்லும். என்னுடைய வேண்டுகோளைத் தாம் மறுப்பது நியாயமன்று.

ஜெ. நான் கூறுகின்றேன், பிறகு என்னைப் பழிக்க வேண்டாம். இன்றைத்தினம் இருபத்தைந்தாநாள் தாம் இறக்கப் போகின்றீர்! நான் வருகின்றேன்.

ப. ஐயா! ஐயா! போகவேண்டாம். சுவாமி! இதனுண்மையைத் தாங்கள் எனக்குக் கூறிவிட்டேபோகவேண்டும்—அது ஏன் அப்படிக்கூறினீர்?

ஜெ. ஐயா! இன்னும் நீர் கேட்பீராயின் உமக்கு மிகவும் வருத்த முண்டாகும், வேண்டாம்.

ப. அப்படியல்ல எப்படியும் தாங்கள் சொல்லவேண்டும் இதற்குள்ளாக நான் எப்படி இறக்கவேண்டி வரும் ?

ஜெ. பலாயனரே ! இப்பொழுது உமது வலதுகையில் நோயெடுக்கவில்லையா ?

ப. ஆம்.

ஜெ. அது எதனால் என்று நினைக்கின்றீர் ?

ப. எனக்குத் தெரியவில்லை. இதைக்கொண்டா நான் சீக்கிரம் இறக்கப்போகின்றேன் என்று கூறிவிட்டீர் ?

ஜெ. உம்முடைய வீட்டில் ஏதாவது நாய் இருக்கின்றதா ?

ப. இருக்கின்றது.

ஜெ. உம்முடைய வலதுகையில் எங்காவது கிறி இரண்டு மூன்று துளி இரத்தமெடுத்து அந்நாய்க்கிட்டுப் பாரும். அப்புறம் சொல்லுகின்றேன்.

ப. இதென்ன ஆச்சரியம் ! அடே ! அவன் பெயரென்ன ? தாரகா (உள்ளே இருந்து தாரகன் சுவாமி ! என்கிறான்) நம்முடைய நாயெங்கே இருக்கின்றது ?

தா. (உள்ளேயிருந்து) இதோ உள்ளே தூங்கிக்கொண்டு இருக்கின்றது.

ப. இதோ நான் வருகின்றேன். தாங்கள் சற்றுப்போகாதிருக்க வேண்டும். (உள்ளே போகிறான்.)

ஜெ. இருக்கின்றேன்—நீ போ என்றாலும் நான் இனி போகமாட்டேனப்பா ! இவனுக்கு நாம் நம்முடைய விர்த்தாந்தத்தை வெளியிடாது சௌரிய குமாரனுடைய செய்கையை யெல்லாஞ் சொல்லி, அவன் இவனுக்குக் கொடுத்த விஷத்தினின்றும் நாம் இவனைத் தப்புவிக்க முயலுவதாகக் கூறி நமது வசப்படுத்த வேண்டும்.

**தாரகன் விரைந்தோடி வருகிறான்**

தா. ஐயா ! உம்மை ஐயா சீக்கிரம் அழைத்து வரும்படியாகக் கூறினார்.

ஜெ. அப்பா, என்ன சமாசாரம் ?

தா. என்னமோ எனக்கொன்றும் தெரியாது. எங்கள்நாய்க்கு என்னமோ கொடுத்தார் ; அது வலது பக்கமெல்லாம் ஒரு வலி கண்டு இழுத்துக்கொண்டிருக்கின்றது. ஐயா திக்பிரமை கொண்டவர்போலிருக்கின்றார். சீக்கிரம் போம், (ஜெயபாலன் உள்ளே போகிறான்.)

**தா.** இது என்னடா இது! இந்த ஜோசியர்தான் என்னமோ சொன்னாற்போலிருக்கின்றது. அந்த நாய்க்கு ஐயா என்னமோ தின்னக் கொடுத்தார். உடனே நம்முடைய ஐயாவுக்கு கையில் வலிக்கின்றது போலல்லவோ அதற்கும் வலிக்கின்றது! என்னவோ சமாசாரம் தெரியவில்லை! ஐயாவும் என்னை அப்புறம் போயிரு என்று கூறினார்! (உட்காருகிறான்.)

விடங்கன் சந்நியாசி வேடம்பூண்டு வருகிறான்.

**தா.** யார் ஐயா அது? நீரும் ஒரு ஜோசியரோ?

**வி.** இல்லை அப்பா, நான் ஒரு சந்நியாசி. உம்முடைய எஜமானனை நான் பார்க்கவேண்டும்.

**தா.** அதெல்லாம் இப்பொழுது, பார்க்கமுடியாது—ஒரு நாய் போதும் அந்த மட்டும்.

**வி.** தாரகா! உன்னாலும் என்னைக் கண்டுபிடிக்க முடியவில்லை அல்லவா!

**தா.** விடங்கா! இந்த வேஷமென்னடா?

**வி.** அதெல்லாமிருக்கட்டும் எனக்கிப்பொழுது நேரமில்லை. பலாயனரிடம் நாங்கள் அவர் சொன்னபடி புறப்பட்டு விட்டோம் என்றும், எப்படியும் வேலை முடித்துக் கொண்டு திரும்பி வருகின்றோமென்றும் கூறிவிடு. (போகிறான்)

**தா.** சரி! ஏமாங்கதராஜன் தப்பித்துக்கொண்டார் என்று பார்த்தேன், மறுபடியும் வழி வைத்தீர்களா!

ஜெயபாலனும் பலாயனனும் வருகிறார்கள்.

**தா.** ஐயா, விடங்கன் இங்குவந்து தாம் சொல்லிய வேலையைச் செய்யப் புறப்பட்டு விட்டதாகக் கூறும்படி சொல்லிவிட்டுப் போனான்.

**ப.** சரிதான், நீ போ உள்ளே. (தாரகன் உள்ளே போகிறான்) ஐயா! இப்படி நடக்குமென்று நான் கனவிலும் நினைக்கவில்லையே, நான் அவனுக்காக எவ்வளவு பாடு பட்டேன் அதையாவது பார்த்தானா? இப்பொழுதெல்லாம் விளங்குகின்றது. ஆஹா! சிநேகிதன் என்றும் பாராமல் எனக்கு விஷம் கொடுத்த அவனை நான் சும்மாவிட்டேனா!—ஐயா! இதற்கு மாற்றொன்றுமில்லையா! என்னுடைய ஆஸ்தியெல்லாம் உமக்குத் தருகிறேன் இதை மாத்திரம் கண்டறிந்து கூறுமே!

**ஜெ.** அப்பா! நான் தான் முன்பே கூறினேனே! என்னால் கூடியமட்டும் பிரயத்தனப்பட்டு அந்த மூலிகையை

தேடிப் பிடித்து உனக்குத் தருகின்றேன். ஆயினும் நீ நான் சொல்லுகிறபடி செய்யவேண்டும். செய்கிறபட்சத்தில் எப்படியும் உனக்கு அதைக் கண்டெடுத்துத் தருகிறேன்.

ப. அப்படியே செய்கின்றேன், எப்படியாவது நான் பிழைத்தாற் போதும்.

ஜெ. ஆனால் நீ இவ்விஷயங்களை யெல்லாம்பற்றி சௌரிய குமாரனுடன் ஒன்றும் கூறலாகாது. அவனுக்கு நீ ஒரு தீங்கும் செய்யலாகாது. நான் உனக்கு உத்தரவு கொடுக்கும்வரையில் முன்பிருந்தது போலவே அவனுடன் அன்யோன்யமாயிருப்பதுபோல் நடித்து வரவேண்டும். நான் சீக்கிரம் உனக்கு ஏதாவது எழுதியனுப்புவேன். அதன்படியே செய்யவேண்டும். என் கட்டளையின்படி மாத்திரம் நீ நடந்துவருவாயாயின் உனக்கு எப்படியும் நான் உதவிசெய்கின்றேன் நீ வேண்டியபடி.

ப. அப்படியே செய்கின்றேன், நீர் மாத்திரம் என்னுடைய உயிரைக் காப்பாற்ற வேண்டும். ஆனால் ஏமாங்கத ராஜன் எங்கிருக்கின்ருன் என்று கூறினீர்?

ஜெ. நான் உனக்கு அதைக் கூறவில்லையே. அவர் உயிருடன் இருக்கிருர் என்றுமாத்திரம் கூறினேன். அதையேன் கேட்கின்ருய்?

ப. உமக்கொன்றும் தெரியாது அப்பாதகன் சௌரியகுமாரனுடைய வேலை யெல்லாம். இப்பொழுது அவர் தூமகாரண்யத்திற்ருன் ஒளித்திருப்பாரென்றும் அங்கு போய் எப்படியாவது அவரைக் கொன்றுவிட்டே வர வேண்டுமென்றும் இரண்டு கொலையாளிகளை ஏவியிருக்கின்ருன். அவர்கள் அவ்வேலைக்காகப் புறப்பட்டு விட்டார்கள். என்னுடைய வேலைக்காரன் சற்றுமுன்பாகக் கூறியதைக் கேட்கவில்லையா தாம்?

ஜெ. அப்படியா சமாசாரம்? ஐயோ!—அப்பா! பலாயனு! சிநேகிதன் என்றும் பாராமல் உனக்கு விஷம் கொடுத்திருக்கின்ற சௌரியகுமாரனைத் தண்டித்து ஏமாங்கத ராஜனுக்கு உதவிசெய்ய வேண்டுமென்று உனக்கு உண்மையில் இஷ்டமிருக்குமாயின் உடனே ஏமாங்கதருக்கு இக்கொலையாளிகளின் விவரத்தையெல்லாம் கூறி ஜாக்கிரதையாயிருக்கும்படியாக ஒரு நிருபமெழுதி என்னிடம் கொடு. நான் அதை அவருக்குக் கொடுக்கின்றேன்.

ப. இதோ அப்படியே செய்கின்றேன். அக்கொலையாளிகளில் ஒருவன் சன்யாசிவேடமும் மற்றொருவன் ஒரு வியாபாரியின் வேடமும் பூண்டிருப்பான்; நான் எல்லாவற்றையும் எழுதி இதோ தருகின்றேன்.

ஜெ. அப்படியல்ல ஒரு நிருபம் எழுதி அதை உனக்குப் பூரண நம்பிக்கையுள்ள ஒரு சேவகனிடம் கொடுத்து தூமகாரண்யத்திற்கு சீக்கிரம் எடுத்துக்கொண்டு போகும்படி சொல், அவன் அங்கு சென்றவுடன் யாராவது வந்து அவனை யார் என்று கேட்டால் "சாம்பிணம்" என்று கூறி ஏமாங்கத ராஜனுக்கு ஒரு நிருபம் கொடுக்க வேண்டுமென்று சொல்வானாயின், அந்நிருபம் ஏமாங்கதனிடம் போய்ச்சேரும். பலாயனா! உன் உயிரின்மீது உனக்காசையிருக்குமாயின் நான் சொன்னபடி செய். சீக்கிரம்.

ப. அப்படியே செய்கின்றேன் இதோ.

ஜெ. சீக்கிரம். நான் போய்வருகின்றேன். நான் கூறியதெல்லாம் ஞாபகமிருக்கட்டும். நீ அணுவளவு பிசகினால் நான் ஜோசியத்தினால் கண்டறிவேன் பிறகு உன்கதி—

ப. ஐயனே! நீர் என்னை எப்படி வேண்டுமென்றாலும் பரிசோதித்துப் பாரும். நீர் கூறியதுமாத்திரம் ஞாபகமிருக்கட்டும், என்னை எப்படியாவது காப்பாற்றவேண்டும். (வீட்டிற்குள்ளே போகிறான்)

ஜெ. இதென்ன ஒன்றொன்றாய் முளைக்கின்றதே! நான் சீக்கிரம் தூமகாரண்யம் போகவேண்டும். ஆயினும் பலாயனனை நன்றாய் நம்பலாமெனத் தோற்றுகின்றது. இந் நிருபம் போய்ச் சேருமுன் எல்லாம் கெட்டுவிட்டால்! நானும் சீக்கிரம் சென்று ஏமாங்கதனைப் பார்க்கவேண்டும், இங்கு என்வேலையை சீக்கிரம் முடித்துக்கொண்டு, சௌரியகுமாரன் நாம் எண்ணியதற்கு மேலாகத் தானிருக்கின்றான். ஆயினும் நான் உயிருடன் இருக்குமளவும்!- (போகிறான்)

காட்சி முடிகிறது.

## நான்காவது காட்சி.

இடம்: தாமகாரண்யத்திலோர் மலைக்குகை. காயி முதலிய கள்வரெல்லோரும் வருகிறார்கள். வயத்தான் ஒரு மூலையில் படுத்துறங்குகின்றான்.

**கா.** அடே! இதோ படுத்துகுனு தூங்கராண்டா—இத்தனி நாழி தேடினமே!

**அ.** எழுப்புடா அவனை எழுப்பு! இன்னும் என்னடா தூக்கம்?

**கோ.** அடே! வயுத்தா! எழுந்திரடா எழுந்திரு. பொழுது விடிஞ்சி போச்சிடா.

**வ.** அடேசத்! நான் தூங்குரேண்டா எழுப்பாதைங்கோ.

**அ.** அடே எழுந்திரடா அண்ணு! இண்ணைக்கி சீக்கிரம் காலமே போயிவேட்டையாடி சாமிக்கு திண்ரத்துக்கு என்னமாரு புடிச்சிகினு வந்தூட்டு அப்புறம் நம்ப வேலைக்குப் போகணு மிண்ணு நாயஞர் சொன்னுனே கேக்கலே? அடே!—கோஸ்கி! இவன் எழுந்திருக்கிறதா காணே! நேத்துநாலாடுதிண்ணுனே எழுந்திருப்பானே இப்பொ!

**கா.** அடே, ஏண்டா பொய்பேசரே நாலாடு ஒருத்தன் திண்ணு வாருடா!

**அ.** அடே! நாலுகாலு இவன் பக்கத்திலே இருந்துது.

**கா.** அதுவும்பொய். ஒண்ணுதானேடா இருந்துது?

**அ.** நாலுகாலு ஒண்ணுதானேடா பின்னே?

**வ.** அடே! சத்! வளவள இண்ணு கூச்சபோட்டுகினு! போங்கோ நான் வல்லெபோங்கோ!

**அ.** அடே கோஸ்கி! (ஒருபுறமாக) இவனை எழுப்பிரத்துக்கு நான் ஒருவழி சொல்ரேன் பார் (உறக்க) அடே! காயி! ஏதுடா இந்த மான்கறி? சாமிக்கிவச்சி இருந்துதே அத்தையா தூக்கிகினு வந்தூட்டே? கொண்டா இப்படி.

**வ.** (விரைவில் எழுந்து) எதோடா மான்கறி எதோ? எதோ?

**அ.** பாத்தியா எழுந்தான்!

**வ.** அடே அந்தர்டப்பு! பொய்யாபேசனே? எனக்கு தூக்கம்வருதுபோ (மறுபடியும் தூங்கப் பார்க்கிறான்.)

**கா.** (அவனைத் தடுத்து) அடே! சத் இன்னம் என்ன தூக்கம்? வாடா வேட்டையாடப் போகணும். வேட்டையாடி மானே புடிச்சம் இண்ணை அப்புறம் தின்னலாம் வா. சீக்கிரம் போவோம் வா. (ஒருபுறமாகப் போகிறார்கள்)

**சங்கன் வர்த்தகன் வேடந்தரித்து மற்றொரு பக்கம் வருகிறான்.**

ச. என் சொற்படிகேட்டிருந்தால் இந்த விடங்கன் இக் கள்வர் கையில் ஒருக்காலுமகப்பட்டிருக்கமாட்டான். ஆயினும் அவர்கள் அவனைக்கொன்று விடாமலிருக்கும் பட்சத்தில் ஒருவிதத்தில் இது அனுகூலமே. நேற்றைத் தினம் விடங்கனுடன் பேசிக்கொண்டிருந்த கள்வன் கூறிய அடையாளங்களினால் இப்பொழுது ஏமாங்கதன் இவர்களுக்குத் தலைவனாக இருக்கின்றான் என்று நம்ப வேண்டியதாயிருக்கின்றது. இப்பொழுது நான் ஏமாங்கதன் இருக்குமிடமறிந்து நேராகச்சென்று கொல்வதென்றால் அசாத்தியமானகாரியம். இக்கள்வர்களும் நம்மைவிடமாட்டார்கள். ஆகவே நான் இவர்கள் கையில் அகப்பட்டு இவர்களுடன் சேர்ந்து கொண்டாற்போல் நடித்து உண்மையை அறிந்து சமயம் பார்த்து நமது வேலையை முடித்துக் கொண்டு திரும்பவேண்டும். பகையாளியின் குடியை உறவாடியே கெடுக்கவேண்டும். அதுவுமன்றி இப்படிச் செய்வதனால் விடங்கனுடைய சமாசாரமும் நமக்குத் தெரியவரும்—உம்? நமது பின்பாக இருவர் தொடர்கின்றார்கள். யுக்திசாலிகள் தான். தூண்டிவிட்டால் மீன் அகப்படுகின்றது (தன்பையிலிருந்து ஒரு பதக்கத்தை யெடுத்துமெல்ல கழுத்திலணிந்து கொள்ளுகிறான். ஐயோ! இந்தக்காட்டில் வந்து அகப்பட்டுக் கொண்டோமே! என்ன செய்கிறது? இங்கு ஒரு துணையையும் காணோமே (பயந்தவனைப் போல்பாவிக்கிறான்)

**நான்குபுறமும் திடீரென்று வந்து கள்வர்கள் சுற்றிக்கொள்கிறார்கள்.**

நா. நில் அங்கே! உன்கையிலிருக்கின்றதெல்லாம் கொடுத்து விடுகின்றாயா? உதைவேண்டுமா!

வ. உதைச்சா தவிர கொடுக்கமாட்டாண்டா அவன், உதைங்கடா! உதைங்கடா!

ச. ஐ ஐயோ! அப்பா! என்னிடம் உள்ளதை யெல்லாம் கொடுத்து விடுகின்றேன் என்னை அடியாதேயுங்கள்! அடியாதேயுங்கள் (அவனிட முள்ளதையெல்லாம் கவர்கின்றார்கள்) ஐயோ! அப்பொழுதே நினைத்தேன் நான் புறப்படும்பொழுதே ஒரு கள்பானை எதிரில் வந்தது.

வ. அடே! அத்தெ முன்னேகேளுங்கடா ஓதைச்சி, எங்கே அந்த கள்ளுப்பானை?

**கோ.** அடே! நான் மாம்பழம் இண்ணுபாத்தா, ஈச்சம்பழமா யிருக்குதுடா!

**அ.** இவ்வளவுதானு! சீ! ஆனு தோலை உரிச்சிகினு உட்டுட லாம்.

**வ.** ஆமாம் அந்த கள்ளுபானை என்னமாபோரது? நீ தானே அண்ணைக்கி எல்லாத்தையும் குடிச்சூட்டெ.

**நா.** அடெ! வாயைமூடு. அதிருக்கட்டும் நீயாரடா? காட்டில் வந்தால் திருடர்கள் இருப்பார்கள் என்றுதெரியுமே, சும்மா வரலாமா? அவர்களுக்கு கொடுக்க ஏதாவது கொண்டுவர வேண்டாமா?

**ச.** அப்பா! நான் புஷ்பபுரியிலுள்ள ஒரு எளியவர்த்தகன், நான்—

**அ.** அடேடே! புஷ்பபுரியிலிருந்து யாராவது வந்தா அப்படியே புடிச்சிகினுவரச்சொன்னுரே நம்பசாமி!

**அ.** இவனெ நம்ப அப்படியே புடிச்சிகினு போகலாம்.

**ச.** அப்பா! என்னை அடிக்காதீர்கள், நீங்கள் எங்கே அழைத்துக் கொண்டு போனுலும் வருகிறேன் நான்.

**வ.** ஆமாம் உன்னை அடிக்கத்தேவலே இண்ணுசொல்ரேன்; நீ அந்த கள்ளுபானைமாத்திரம் எங்கே இண்ணு சொல்லி விடு—

**ஏமாங்கதன் கள்வர்தலைவன் கோலத்துடன் வருகிருன்.**

**ஏ.** அடே! யார் அடா இவன்?

**நா.** சுவாமி! இவன் புஷ்பபுரத்து வர்த்தகனும், இங்கே காட்டில் வழிதெரியாது அகப்பட்டானும். நாங்கள் என்னவோ இருக்கு மென்றுபார்த்தோம், இது தான் இருந்தது. (அபகரித்தபொருளை யெல்லாம் ஏமாங்கதன் பாதத்தருகில் வைக்கிருர்கள்)

**ஏ.** அப்பா உன் பெயரென்ன?

**ச.** என்பெயர் அருணுசலசெட்டி. சொற்ப வியாபாரம் பேரீச்சம் பழத்தில்.

**வ.** எங்கே! பேரீச்சம்பழம் கொண்டாந்திருக்கிறையா?

**ஏ.** நீ ஏன் இங்கு வந்தாய்?

**ச.** மகாராஜா அவர்கள் என்னுடைய சொத்தையெல்லாம் அபகரித்துக்கொண்டு என்னைத்துரத்திவிட்டார்! நான் அடுத்த ஊரில் என்பந்துக்களிடம் போய்பிழைக்கலா மென்று வந்தேன். வந்த இடத்தில் வழிதெரியாது இக் காட்டில் அகப்பட்டுக் கொண்டேன்.

**ஏ.** நீ, புஷ்பபுரியில் அரண்மனைக்கு எப்பொழுதாவது போவதுண்டா?

ச. நான் அடிக்கடிப் போவதில்லை, ஆயினும், இரண்டு தினங்களுக்கு முன்பாக ஒருநாள் போகவேண்டி வந்தது.

ஏ. என்ன விசேஷம்?

ச. ஏமாங்கதராஜனுடைய புத்திரன் பாலசூரியன் ஒருவரிருக்கின்றார் அவர் என்னை அழைப்பித்தார்.

ஏ. பாலசூரியனா? அப்பா நான்—அப்பா! பாலசூரியன் உன்னை எதற்காக வரவழைத்தான்? என்னசொன்னான் உன்னிடம்?

ச. ஐயா! நான் அவர் கூறியதை ஏமாங்கதராஜனுக்குத் தவிர மற்றொருவருக்கும் வெளியிடுவதில்லை என்று பிரமாணம் செய்திருக்கின்றேன்;

அ. (ஒருபுறமாய் கோஸ்கிக்கு) அடேடே! நம்ப பழயசாமி பேரெ சொல்லி எவனோ ஒருத்தன் இந்தசாமிக்கு கொடுக்கணும் இண்ணு ஒரு ஓலை கொடுத்தானே அது எங்கேடா? கொடுத்தூட்டையா?

கோ, இல்லேடா இல்லே! நன்னா ஞாபகம் படுத்தனே! சாமி! எவனோ ஒருத்தன் உங்ககிட்ட இந்த ஓலெயெ கொடுக்கணும் இண்ணு சொல்லி கொடுத்தூட்டுப் போனான்! அவனே புடிச்சிகலாம் இண்ணு பார்த்தோம் பழயசாமி பேர்சொல்லவே உட்டூட்டோம்.

ஏ. என்ன ஓலை? (வாங்கி அதைப் படித்துப்பார்க்கிறான்)

ச. சரி! என்னவோ சங்கடம் தெரியவில்லை! எமனோலை வந்து விட்டது!

ஏ, ஆஹா! என்ன ஆச்சரியம்! குலசேகரன் கூறியவண்ணமே இருக்கின்றது! அடே! கோஸ்கி! இவனை ஜாக்கிரதையாகப் பிடித்துக்கொள்ளுங்கள்!—சந்தேகமில்லை! இவன் தான். அடே! காயி அந்தர்டப்பு, நீங்கள் சென்று நேற்றைத்தினம் ஒரு சன்யாசியைப் பிடித்து அடைத்து வைத்திருக்கின்றதாகக் கூறினீர்களே, அவனை ஜாக்கிரதையாகக்கட்டி என்முன் இழுத்து வாருங்கள்!—என்ன ஆச்சரியம்! (சில கள்வர் போகின்றார்கள்) சரி! தீர்ந்தது நம்முடைய வேலை!

சன்யாசி வேடம்பூண்ட விடங்கனைக் கள்வர் பிடித்து வருகிறார்கள்.

ஏ. சரி! அடையாளங்களெல்லாம் சரியாகவேயிருக்கின்றன, இதில் சந்தேகமில்லை. ஓய்! சன்யாசி! அதோ நிற்கின்றானே யார் தெரியுமா உமக்கு?

**வி.** அப்பனே! எந்நேரம் ] சிவயோகத்திலிருக்கும்படியான நமக்கு வேறு என்ன தெரியப்போகின்றது? எல்லாம் சிவமாகத் தோற்றுகின்றது. சிவத்திற்கு பேதமேது? ஜகத் சிவமயம்.

**ஏ.** போதும், உங்களுடைய கண்கள் சந்தித்தபொழுதே நான் உண்மையை அறிந்துகொண்டேன், இனிச் சந்தேகமேன்? அடே கோஸ்கி (சைகை செய்கிறான்.)

**கோ.** சாமி! நமக்கு ஒருகெடுதியும் செய்யாதவங்களே கொல்லக்கூடாது இண்ணுபழயசாமி உத்திரவு பண்ணியிருக்கிறாரே!

**ஏ.** நான் சொன்னபடி செய்யமாட்டாய் நீ!, நாயனூர் மக்கன் தேவ்!

(ஏமாங்கதன் சைகைசெய்ய நாயனூரும் மக்கன்தேவும் சங்கன்,விடங்கன் இருவரையும் கட்டாரியால் குத்தி விடுகிறார்கள்.)

**ச.** தக்க—தண்டனையே (கீழே விழுகின்றான்.)

**வ.** அடே! இப்பவாவது அந்த கள்ளுபானை எங்கே இருக்குது சொல்லிவிட்டு செத்துபோடா! (சங்கன் இறக்கின்றான்)

**வி.** ஜகத்-சிவமயம்! (இறக்கின்றான்)

**ஏ.** கோஸ்கி! இப்படி வா! ஏன் இவர்களைக் கொல்லவேண்டுமென்று கேட்டாய்? அவர்கள் மேலாக அணிந்திருக்கும் வஸ்திரத்தை எடுத்து அங்கே என்ன இருக்கின்றதோ அதை எடுத்துவா.

**கோ.** (அவர்கள் மேலாடையை எடுத்து) அடடே! கத்திடா! பாத்தியா திருட்டுப்பசங்களே!

**ஏ.** இவர்கள் என்னைக் கொல்லவந்தார்கள், தெரியுமா உங்களுக்கு! என்ன ஆச்சரியம்!—ஓலையை முழுதும் படித்துப் பார்ப்போம் இதென்ன அடியில் என்னமோ எழுதியிருக்கின்றதே! "உம்முடைய தகப்பனார் மிகவும் அசௌக்கியமாய் இருக்கின்றார். அவருடைய முடிவு காலம் சமீபத்திலிருக்கின்றதென்று நினைக்கின்றேன். இதை உமக்குத் தெரிவிக்கவேண்டி வந்ததே என்று எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கின்றது, ஆயினும் அதைரியப்பட வேண்டாம்." அப்படியா—ஐயோ! நான் இறந்தாலும் பெரிதல்ல என்பிதாவை நான் எப்படியும் போய்ப் பார்க்கவேண்டும்—அடே! கோஸ்கி—

ஜெயபாலன் வருகிறான்.

அப்பா! குலசேகரா, வந்தாயாநீ! என்னை சுவாமிதுரதிர்ஷ்டத்திற்கென்றே பிறப்பித்தாரோ? (கண்ணீர் விடுகிறான்)

ஜெ. ஓ! முன்பே எல்லாம் நடந்து விட்டாற்போலிருக்கின்றது! ஐயனே! என்ன சமாசாரம்? இதெல்லாம் என்ன?

ஏ. அப்பா! நீ சௌரியகுமாரனைப்பற்றி கூறியதெல்லாம் உண்மைதான். இதோ புஷ்பபுரியினின்றும் பலாயனன் என்னும் ஒரு மந்திரி எழுதியிருக்கின்றான் பார், (ஓலையைக் கையில் கொடுக்கிறான்) அப்பா, சௌரியகுமாரன் இவ்வளவு துரோகி என்று நான் முன்பு கனவிலும் நினைக்கவில்லை. பலாயனனுக்கும் விஷம் கொடுத்திருக்கின்றானாமே! அப்பா சினேகிதன் என்றும் பார்க்கலாகாதா? இவ்வளவு செய்தவன் என் பெண்சாதி பிள்ளையை சும்மாவிடுவானோ? நான் இங்கிருப்பது முதலிய விஷயங்களெல்லாம் அவனுக்கு ஒரு ஜோசியர் வந்து கூறியதாக எழுதியிருக்கின்றான். இந்த ஓலை என்னிடம் வந்து சேர்ந்திரா விட்டால் எப்படியும் இதோ இறந்து கிடக்கும் பாதகர்கள் கையினால் நான் இறந்திருப்பேன் என்பது திண்ணம்! அந்தமட்டும் சுவாமியினுடைய கிருபை இருந்ததே எனக்கு!—ஆயினும் ஒன்று போனால் ஒன்று முளைக்கின்றதே யொழிய வேறொன்றுமில்லை. என் பிதா மிகவும் உடம்பு அசௌக்கியமாயிருக்கிறாராம்! இதற்கு நான் என்ன செய்வது?

ஜெ. (தனக்குள்) அடடா! நாம் ஒன்றை உத்தேசிக்க அது வேறொன்றாய் முடிகின்றதே!—ஆம் அப்படித்தான் எழுதியிருக்கின்றது, ஆயினும் அவருக்கு ஒன்றும் இப்பொழுது நேரிடாதென்று நினைக்கின்றேன்.

ஏ. எல்லாம் சுவாமியினுடைய கருணை. அப்பா! நீ என்ன சொல்லுகின்றாய்?

ஜெ. என்ன சொல்வது? எதைப்பற்றி?

ஏ. அப்பா! என் உயிர்போனாலும் போகின்றது, நான் எப்படியாவது என் பிதாவைப் பார்க்கவேண்டும்.

ஜெ. பிதாவைப் பார்க்கவேண்டுமா! ஐயனே! என்ன சமாசாரம்? பிதாவையாவது, நீராவது, பார்ப்பதாவது! நீர் உமது நாட்டிற்குள் காலை வைத்தவுடன் உயிரிழக்க வேண்டி வருமென்பதை மறந்தீரோ? உமது பிதாவுக்கு ஒன்றுமில்லை; வேண்டாம்.

ஏ. அப்பா! நீ என்ன சொன்னாலும் கேட்கமாட்டேன். என் உயிர்போனாலும் சரி! நான் போகவேண்டும் (புறப்படுகிறான்,)

ஜெ. (கையைப்பிடித்து) சற்றுப்பொறும் சொல்லுகின்றேன் அடே! நாயுனோர் நீங்களெல்லாம் போயிருங்கள் அப்புறமாய். (கள்வர் எல்லோரும் போகிறார்கள்) ஐயனே, நீர் நன்

றாய் யோசித்துப் பாரும். நீர் இப்பொழுது உம்முடைய பிதாவைப் பார்க்க முயல்வது பிரயோஜனமற்ற காரியம்! இதனால் பெருந் தீங்குகளெல்லாம் விளையும்.

ஏ. அப்பா! உன்னை நான் மிகவும் வேண்டிக்கொள்ளுகிறேன், இது கஷ்டமென்று எனக்கும் தெரிகின்றது. ஆயினும் இந்த உதவிமாத்திரம் எனக்குச் செய், நான் எப்படியும் பிதாவை ஒருமுறையாவது பார்க்கவேண்டும்.

ஜெ. (ஒருபுறமாய்) இனி இவருடன் பேசுவதிற் பயனில்லை.— ஆனால் அரசே, என்சொற்படி கேட்கின்றீரா! நான் உம்முடைய பிதாவைப் பார்க்கும்படியாகச் செய்கின்றேன்.

ஏ. அப்படியே செய்கின்றேன். நீ என்ன செய்யச் சொன்னாலும் செய்கின்றேன்.

ஜெ. செய்கின்றீரா? இது சத்தியம்?

ஏ. சத்தியம், எப்படியாவது என் பிதாவைப் பார்த்தால் போதும்.

ஜெ. (தனக்குள்) இதுவும் ஒருவிதத்தில் நமக்கனுகூலந்தான்!— ஐயனே, நான் உம்மை ஓர் ஔஷதத்தினால் உருவை மாற்றி ஊமையும் செவிடுமாக்கி பலாயனனுக்கு ஒரு நிருபம் கொடுத்தனுப்புகிறேன். அந்நிருபத்தை பலாயனனிடம் கொடுத்தால் நீர் அரண்மனைக்குட்சென்று சௌரியகுமாரனைக் காணவேண்டி நேரிடும்.

ஏ. சௌரியகுமாரனையா!

ஜெ. ஆம் ஜாக்கிரதை! பலாயனனுக்காவது சௌரியகுமாரனுக்காவது நீர் இன்னாரென்று உமது செய்கையால் வெளியிட்டுக் கொள்ளப்போகின்றீர்! அவர்கள் ஏதாவது எழுதிக்கேட்டாலும் ஒன்றும் பதில் எழுதாதீர்! தெரியுமா?—சௌரியகுமாரனுடைய அறைக்குட் சென்றவுடன் அவன் வெளியே போகும் சமயம் பார்த்து அங்கு வைத்திருக்கும்படியான ராஜமுத்திரையை எடுத்துக்கொண்டு வெளியே வந்து, பயப்படாமல் உமது பிதா இருக்கும் அறைக்குட்சென்று அவரைப் பார்த்துவிட்டு, சீக்கிரம் திரும்பி மேலைக்கோபுரவாயிலருகில் வருவீரானால், நான் அங்கு வந்திருப்பேன், பிறகு செய்ய வேண்டிய வேலையை அப்புறம் சொல்லுகின்றேன். நீர் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். நான் அனுப்பும்படியான மாறுவேடத்தில் உம்மை உமது பிதாவும் கண்டுபிடிக்கமாட்டார். நீர் மாத்திரம் பயந்தவரைப்போல் பாவிக்கவே கூடாது, தெரியுமா?

ஏ. ஆம். அதெல்லாம் சரிதான். அந்த முத்திரை உனக்கென்னத்திற்கு? அதை எடுத்துவர முடியாது, ஒருவருமெடுக்காதபடி அது இருக்குமிடத்தில் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றதே?

ஜெ. அரசே, நான் கூறுவதற்கொன்றும் நியாயம் கேட்கலாகாதென்று கூறினதை மறந்தீரோ! அதிருக்கட்டும்—ஆனால் அந்த முத்திரையை எடுத்துவர முடியாதா?

ஏ. முடியாது.

ஜெ. பெரிதன்று, உம்மிடம் இரண்டுவெறும் ஓலைகளைத் தருகின்றேன். அதன் அடியில் அம்முத்திரையை பதித்துக் கொண்டு வரவேண்டும், ஜாக்கிரதை இதை ஒருவருமறியாதபடி செய்யவேண்டும். யாராவது பார்த்துவிட்டால் எல்லாம் கெட்டது. அரசே, தாம்போய் திரும்பிவருமளவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும், உமது செய்கையால் ஒருவேளை யாராவது கண்டு பிடித்துவிட்டால்?—

ஏ. அப்பா நான் மிகவும் ஜாக்கிரதையாயிருப்பேன். பயப்படாதே.

ஜெ. எப்படியிருக்குமோ? நம்மாலான அளவு ஜாக்கிரதையாயிருக்கவேண்டும் நாம். ஐயனே, நமது கள்வர்களை அழையும்.

ஏ. ஏன்?

ஜெ. சொல்லுகின்றேன் அழையும்.

(ஏமாங்கதன் தாரையெடுத்தூத, கள்வரெல்லோரும் வந்து சேர்கின்றார்கள்)

நமது கள்வருதவி நமக்கிருக்குமளவும் பயமில்லை!—அடே! நாயனர் நீங்களெல்லோரும் நாளைத்தினம் காலை புஷ்பபுரத்துக் கடைத்தெருவில் வெவ்வேருக மாறுவேடம் பூண்டுவந்து சேர்ந்திருக்க வேண்டும். இதற்கு வேண்டிய காரியங்களையெல்லாம் நீ பார்த்து இவைகளையெல்லாம் அங்கு ஜாக்கிரதையா யிருக்கும்படி செய். மிகவும் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும் நான் அங்குவருவேன். போய் சித்தம் செய்யுங்கள் சீக்கிரம்.

எல். அப்படியே சாமி. (போகிறார்கள்)

ஜெ. ஐயனே, அரண்மனையில் தாம் நடந்து கொள்ளவேண்டியதைப்பற்றி நான் உமக்கு இன்னும் சில சமாசாரங்கள் கூறவேண்டும், வாரும் சொல்லுகின்றேன், சூரபாலக் கோட்டைக்குள் போவோம்.

ஏ. அப்பா! இப்பொழுதாவது சொல்லமாட்டாயா நீ யாரென்று?

ஜெ. ஐயா, நான் சொல்வதைத் தெரிந்துகொள்ளும் அதற்குமேல் போகாதீர். (இருவரும் போகிறார்கள்)

# இரண்டாவது அங்கம்

## முதற் காட்சி.

*இடம். புஷ்பபுரியில் அரண்மனையிலோர் அறை. சௌரியகுமாரன் யோசனை செய்துகொண்டு நிற்கின்றான்.*

**சௌ.** இறந்துபோன ஜெயபாலன் தன்னுடைய குருவென்று நமக்குக் கூறியிருக்கின்ற ஜீவசித்தியே இவனென்று நினைக்கின்றேன். பலாயனன் தன் வீட்டில் வந்திருப்பவனுடைய அடையாளங்களைக் கூறினதற்கும் ஜெயபாலன் கூறியதற்கும் சிறிதேனும் பேதமில்லை. பெயரும் ஒத்திருக்கின்றது. ஜீவசித்தி என்பது சாதாரணமான பெயர் அன்று. ஏன் இன்னும் ஜீவசித்தி வரவில்லை? உடனே அனுப்புகிறேன் என்று கூறிச் சென்றானே பலாயனன். இந்த ஜீவசித்தியிடமிருந்து எப்படியாவது நமக்கு ஜெயபாலன் கொடுத்திருக்கின்ற விஷத்திற்கு மாற்றறிய வேண்டும். தன்னுடைய குருவுக்கன்றி வேறெவருக்கும் அம்மாற்று தெரியாதென்று அவன் நமக்குக் கூறினனல்லவா? எப்படியும் இவனிடமிருந்து இதை அறியவேண்டும். ஆயினும் இந்த ஜீவசித்தி செவிடும் ஊமையுமாமே! இதை நமக்குஜெயபாலன் கூறவில்லையே! பெரிதன்று. எனது கையிலகப்பட்டபின் விட்டேனா இவனை! உண்மையை அறிந்து கொண்டு ஜெயபாலனுக்குச் செய்தவண்ணம் இவனுக்கும் செய்யவேண்டும் —உம்! இப்பொழுது தான் நமக்கு குருபார்வை திரும்புகிறாற் போலிருக்கின்றது! பிதாவோ இறந்து விட்டார்! —அப்பா! என்னுடைய செய்கைகளை நான் நினைத்தால் எனக்கே பயமாயிருக்கிறது! நினையாதிருத்தலே நலம்!— சங்கனும் விடங்கனும் இன்னும் திரும்பி வரவில்லை. ஆயினும் ஏமாங்கதனைக் கொன்றே அவர்கள் திரும்பி வருவார்கள்; சந்தேகமில்லை. ஏன் ஜீவசித்தி இன்னும் வரவில்லை! நேரமாய் விட்டதே—

*ஏமாங்கதன் ஒரு வயதுமுதிர்ந்த வயித்தியனைப்போல் வேடம் பூண்டுவருகிறான்.*

வாரும் சுவாமி. தங்களுக்காக இத்தனை காலம் காத்துக் கொண்டிருந்தேன். தாம் இப்பட்டணத்திற்கு வந்தது என்னுடைய பாக்கியமே. உட்காரவேண்டும் (ஏமாங்கதன் உட்காருகிறான்) தங்களுக்கு ஜெயபாலன் என்றொரு

வன் இருந்தானோ தெரியுமோ?—அடடே! இவன் ஊமையும் செவிடுமென்பதை மறந்தேன்!—எழுதியே கேட்கவேண்டும்—(ஓர் ஓலையில் எழுதி அதனை ஏமாங்கதனிடம் வணக்கத்துடன் கொடுத்து அவன் முன் முழந்தாளிட்டு நிற்க, ஏமாங்கதன் திக்பிரமையைக் கொண்டவனாய் ஓலையை உற்றுப்பார்த்த வண்ணமிருக்கின்றான்) சுவாமி! எப்படியாவது தாம் இதைக் கிருபை செய்யவேண்டும். என்னுடைய ராஜ்யத்தில் பாதி தருகின்றேன்—என்ன சும்மா இருக்கின்றீர்? நான் எழுதியது அர்த்தமாகவில்லையோ? (எழுந்திருக்கிறான். எழுந்தவுடன் எதிரில் கதவின் பக்கத்தில் ஜெயபாலன் உருவைக்கண்டு திடுக்கிட்டு நின்று விடுகிறான். ஜெயபாலன் திடீரென்று மறைகிறான். உடனே சௌரிய குமாரன் சேவகர்களே! சேவகர்களே! என்று கூவிக்கொண்டு அறையை விட்டு வெளியே ஓடுகிறான். காவல் மணிகளெல்லாம் அரண்மனை யெங்கு மடிக்கப்படுகின்றன. இச்சமயத்தில் ஏமாங்கதன் சௌரிய குமாரனைத் தன்முன் காணானாய் மெல்ல எழுந்து ராஜ முத்திரை யிருக்குமிடம் சென்று, தான் கொணர்ந்த இரண்டு ஓலைகளிலும் அதைப் பதிப்பித்துக் கொண்டு அறையை விட்டுச் செல்கிறான் ஒருபுறமாக.)

சுசங்கதை மற்றொருபுறமாக வருகிறாள்.

சு. இதென்ன! மகாராஜா இறந்துகிடக்குஞ் சமயத்தில் அரண்மனை யெல்லாம் இவ்வாறு பெருங்கூச்சலாயிருக்கின்றது! சௌரிய குமாரனைக் கேட்கலாமென்று வந்தால் அவனையும் காணோம். வந்தவுடன் கேட்போம். ஐயோ! பிதா திடீரென்று இறந்தார். இதுவும் நமது அண்ணன் செயலோ? சீ! அப்படி எண்ணவும் என் மனம் எழவில்லை. அப்படியிருக்காதென்று கோருகின்றேன்—ஆயினும்!—இப்பொழுது அவனுடன் ஏமாங்கதனை இனி வரவழைத்துப் பட்டங்கட்டென்று சொல்லிப் பார்க்கின்றேன், அதற்கு என்னசொல்லுகின்றானோ பார்ப்போம், அதில் எல்லாம் வெளியாகின்றது. என்ன சௌரியகுமாரனை இன்னும் காணோம்?—ஆ! மனிதர் வாழ்வு எவ்வளவு அற்பமானது! நேற்றிருந்தார் பிதா இன்றைக்கெங்கே? நான் அவருக்காக இப்பொழுது அழுகின்றேன். அவர் எத்தனை பெயரிறந்ததற்காக அழுதாரோ? எத்தனை பெயர் எனக்காக அழப்போகின்றார்களோ ஒருநாள்? இப்படிச்சென்று கொண்டிருக்கின்றது உலகம்!

சௌரியகுமாரன் விரைந்தோடி வருகிறான்.

**சௌரி.** எங்கே ஜீவசித்தி? (சுசங்கதையை ராஜமுத்திரையிருக்குமிடம் கண்டு) சுசங்கதா! நீ என்ன செய்கின்றாய் இங்கே?

**சு.** அப்பா! பிதா தான் இறந்தாரே! உன்னிடம் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசவந்தேன்—

**சௌரி.** இப்பொழுது உன்னிடம் பேசிக் கொண்டிருக்க எனக்குக் காலமில்லை, உனக்கிங்கென்ன வேலை போ! போ வெளியே! (சுசங்கதை வெறுத்து வெளியே போகிறாள்) கண்டது ஜெயபாலனோ அல்லது அவனுடைய பிசாசோ! அல்லது என்மனப் பிரமையோ! அதே உடையிலிருந்ததே—இந்த ஜீவசித்தியையும் காணோம்!—காஞ்சேயா!

காஞ்சேயன் வருகிறான்.

**சௌரி.** அடே! கண்டுபிடித்தீர்களா?

**கா.** இன்னும் தேடுகின்றார்கள் எங்கும் காணோம்.

**சௌரி.** அதிருக்கட்டும். இங்கு ஒரு வயித்தியன் வந்திருந்தானே அவனை யாராவது பார்த்தீர்களா? பச்சை சால்வை தலையில் கட்டிக்கொண்டு வேறொருசால்வையை அங்கவஸ்திரமாக உடுத்திக்கொண்டிருந்தான்?

**கா.** ஓ! அவரா! நான் தேடிக்கொண்டு வரும்பொழுது தாங்கள் சொன்னவண்ணம் ஒருவர் மகாராஜாவின் பிரேதம் வைத்திருக்கும் அறையில் பிரேதத்தின் கால்மாட்டில் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தார். யாரோ மகாராணியின் பந்து என்றுஎண்ணி நான் சும்மாபோய்விட்டேன்!

**சௌரி.** ஓகோ! ஏதோ சமாசாரம் தெரியவில்லை! காஞ்சேயா! நான் குறித்த மனிதன் அரண்மனையிலாவதிருக்கவேண்டும், சுற்றுபுறத்திலாவது இருக்கவேண்டும். வெகு தூரம் போயிருக்கமாட்டான் இதற்குள்ளாக. பட்டணத்துக் கோபுரக் கதவுகளையெல்லாம் மூடிவிடும்படி நான் கட்டளையிட்டதாகச் சொல். நம்முடைய சேவகர்களையெல்லாம் அழைத்து இவ்விருவரையும் எங்கிருந்தபோதிலும் தேடிப்பிடித்து வரச்சொல். கண்டு பிடிப்பவனுக்கு ஆயிரம் பொன் தருவதாகப் பிரசித்தி செய். சீக்கிரம் போ, நானும் வருகிறேன்—இதென்னவிபரீதம்!

(இருவரும் விரைந்து போகிறார்கள்)

காட்சி முடிகிறது.

---

## இரண்டாங் காட்சி

இடம்.—புஷ்பபுரியில் ஒரு கடை வீதி.

நாயனுர் வயத்தான். முதலிய கள்வர்களெல்லாம், ஒவ்வொருவனும் ஒவ்வொருவிதம் வேஷம் தரித்து ஆங்காங்கு வீதியில் வியாபாரம் செய்து வருகிறுர்கள்.

ஜெயபாலனும் ஏமாங்கதனும் தங்கள் மாறுவேடத்துடன் விரைந்து வருகிறுர்கள்.

ஜெ. இப்பொழுது அதெல்லாம் பேசக்காலமில்லை—சீக்கிரம் வாரும். நம்மைச் சேவகர்கள் பின் தொடர்ந்து வருகின்றுர்கள் ; நான் அப்பொழுதே சொன்னேனே கேட்டீரா! இதை முழுவதும் புசித்துவிடும். அப்பொழுது தான் உமக்கு நன்றுய்ப் பேசவரும்— (சன்யாசி வேடம் தரித்த வயத்தானை நோக்கி) சுவாமி! சன்யாச சிரோமணியே இப் படி வாரும் சற்றே! தாமும் வாரும்.

(இருவரையுமழைத்துக் கொண்டு ஒரு சத்திரத்திற்குள் நுழைகின் றுன்)

நா. (குடுகுடுப்பு வேடந்தரித்து) ஜெயம் வருது! ஒன்றும் பயப் பட வேண்டாம்! பயப்பட வேண்டாம்! (சத்திரத்தினின் றும் ஏமாங்கதன் சன்யாசி உடையிலும், வயத்தான் வயித்திய உடையிலும் ஜெயபாலனுடன் வருகிறுர்கள்.)

ஜெ. வயித்தியரே! நான் சொன்னது ஞாபகமிருக்கட்டும். மறக்க வேண்டாம். (உரத்த சப்தமாய்) சந்தை மெள்ளக் கலையும் சமயமாய் விட்டாற்போலிருக்கின்றதே! வந்த படி! (ஏமாங்கதனை அழைத்துக்கொண்டு விரைந்து செல்கிறுன் கள்வரெல்லோரும் ஒவ்வொருவனுய் மறைகின்றுர்கள்.)

காஞ்சேயனும் ஒரு சேவகனும் ஓடிவருகிறுர்கள்.

சே. அடே! என்னடா காணேமே!

கா. இந்தப் பக்கம் தான் வந்தாற் போலிருக்கிறது.

சே. அதோ! ஒரு சுவாமியார் உட்கார்ந்திருக்கின்றுர் அவரி டம் போய்க் கேட்போம், (குருவேடந் தரித்துட்கார்ந்திருக் கும் கோஸ்கியிடம் சென்று)

கா. சாமி! இங்கே ஒரு வயித்தியர் வந்தாரே பார்த்தீர்களா?

கோ. சிவம்!

கா. பார்த்தீர்களா என்று கேட்கின்றேன்.

கோ. சிவம்!

சே. அடே என்ன இழவு சிவம்! பார்த்தீரா இல்லையா ஐயா?

கோ. சிவம்!

**சே.** அடே காது கேட்கவில்லையா என்ன ?

**கோ.** சிவம் !

**கா.** இந்த சிவத்தைக் கேட்கின்றதில் பிரயோஜனமில்லை— அடடே இதோ இருக்கிருண்டா ! (இருவரும் ஓடிப்போய், வயத்தானைப் பிடித்துக் கொள்ளுகின்றனர் )

**வ.** என்னப்பா ! உங்களுக்கென்ன ஒடம்பு ?

**சே.** உடம்பா ? உடம்பு ஊறுது. அடே ! காஞ்சேயா ! தாரையை ஊது, பிடித்து விட்டோமென்று, ஆயிரம் பொன்கிடைத்தது போ! (காஞ்சேயன் தாரையைஊதுகிருன்)

**வ,** என்ன ! என்ன ! அப்பா ! ஏன் என்னெ கட்டிகினு போரைங்கோ ?

**கா.** சொல்லுகிறேன் வா ! ஆயிரம் பொன்னுக்கு.

**வ.** எனக்கா ஆயிரம் பொன்னு கொடுக்கப்போரைங்க ? அதுக்கு கட்டிகினு போவானே ? சும்மா அழைச்சா வர மாட்டேன ?

**சே.** வா பேசாதே ! (வயத்தானை இழுத்துக்கொண்டு போகிருர்கள்)

காட்சி முடிகிறது.

---

## மூன்றும் காட்சி.

**இடம். காட்டில் கள்வருடைய கோட்டை ஏமாங்கதன் யோசனையுடன் வருகிருன்**

**ஏ.** அப்படி உறுதியாக எண்ணுவதற்கும் காரணமில்லை. இவன்தான் ஜெயபாலனுயிருப்பானுயின் இங்கெப்படி இக்கள்வர்களுக்கெல்லாம் தலைவனுனன் ? ஆயினும் இவ் விஷம் முதலிய விஷயங்களையெல்லாம் பற்றி இவன் அறிந்திருப்பதை யோசிக்குமிடத்து இவன் ஜெயபாலனுயிருக்கலாமென்று நினைக்கவேண்டியதா யிருக்கின்றது. ஒருவேளை நான் நேராகக் கேட்டால் ?

ஜெயபாலன் வருகிருன்.

**ஜெ.** நான் கொடுத்த மருந்தைச்சாப்பிட்டீரா இன்றுகாலை ? இப்பொழுது எப்படி யிருக்கின்றது ?

**ஏ.** சாப்பிட்டேன். இப்பொழுதெல்லாம் முன் போலவே யிருக்கின்றது. அப்பா ! உன்திறமையை நான் என்னென்று சொல்வேன் !—

**ஜெ.** சரி ! ஆனல் இப்பொழுது நான் உம்மை அன்றிரவு பலாயனனுடைய வீட்டருகில் விட்டுச்சென்றது முதல்

நடந்த விர்த்தாந்தத்தைக் கூறும். உமக்கு உடம்பு முதலியனவெல்லாம் முன்போல வாகிறவரையில் தொந்தரவு கொடுக்கலாகாதென்றிருந்தேன்.

ஏ. சொல்லுகின்றேன். நீ போனதும் நான் உள்ளே செல்ல, என் எதிரில் பலாயனன் வரவே உன்நிருபத்தை அவனிடம் கொடுத்தேன்; அதைப் பார்த்தவுடன் மிகவும் ஆச்சரியம் கொண்டவனாய் சற்றுநேரம் அந்நிருபத்தையும் என்னையும் மாறி மாறி உற்றுப் பார்த்துவிட்டு, என்னைக் கையினால் சைகைசெய்து உட்காரச் செய்து உள்ளேசென்று உடுத்திக்கொண்டு சரேலென்று வெளியிற்சென்றான், ஒரு நாழிகை பொறுத்து திரும்பிவந்து அரண்மனையில் சௌரியகுமாரன் என்னைக்காண விருப்பமுற்றிருக்கின்றதாகவும் தான் என்னை உடனே அங்கு அழைத்துக் கொண்டு போகின்றதாகவும் எனக்கு ஓர் ஓலையில் எழுதித் தெரிவித்தான். உடனே எனக்கு உண்டான ஆச்சரியம் கொஞ்சமன்று. பேசவேண்டுமென்று வாயெடுத்தால் பேச வரவில்லை. என்ன செய்வது? ஆயினும் உன் வார்த்தையில் உறுதியான நம்பிக்கை வைத்து அவனுடன் சென்றேன். இரவு பன்னிரண்டு மணியிருக்கும்; நள்ளிருள், என்னை அரண்மனைக்குள் அழைத்துச் சென்று சௌரியகுமாரனுடைய அறைக்கு வெளியே விட்டு கையால் ஜாடைசெய்து போய்விட்டான். நான் கொஞ்சநேரம் யோசித்து தர்மமே ஜெயமென்று உள்ளே சென்றேன். அங்கே சௌரியகுமாரனைக் கண்டதும் கோபத்தினாலும் வருத்தத்தினாலும் என் மெய்யெல்லாம் விதிர் விதிர்த்தது. அவன் என்னை மிகவும் உபசரணையுடன் உட்காரச்செய்து வாயால் என்னவோ கேட்டான்; எனக்கொன்றும் கேட்காமற் போகவே நான் மௌனமாயிருந்தேன். பிறகு ஓர் ஓலையில் எழுதி என் கையிற் கொடுத்தான். அப்பா! அதில் எழுதியிருந்ததை நான் என்னென்று சொல்வேன்! நீ அவனைப் பற்றி கூறியதவ்வளவும் உண்மைதான் சந்தேகமில்லை, நான் பிரமாணம் செய்வேன்! அதைப் பார்த்தவுடன் என் அருகில் முழந்தாளிட்டுக்கொண்டிருக்கும்படியான அவனை ஒரே குத்தாய் குத்திவிடலாமா என் கட்டாரியால் என்று அடங்காக் கோபம் பிறந்தது; ஆயினும் நான் என்ன செய்வேன்! என் உடைவாள் முதலிய ஆயுதங்களை யெல்லாம் நீ வாங்கிக் கொண்டாயே.

ஜெ. என்ன எழுதியிருந்தது அவ்வோலையில்? எங்கே அது?

ஏ. அதை நான் பிறகு கோபத்தில் கிழித்துவிட்டேன். அதில் ஜெயபாலனாகிய தன் பழய சிநேகிதன் உண்டவர்களுக்கு வலது பக்கத்தில் ஒருவித வலியைக்கொடுத்து சீக்கிரத்தில் கொல்லும்படியான ஒரு விஷத்தை தனக்குக் கொடுத்திருப்பதாயும் அந்த மர்மத்தைத் தான் இதுவரையில் ஒருவருக்கும் ஆணைப்படி வெளியிடவில்லை யென்றும் அந்த ஜெயபாலன் தன் குருவாகிய ஜீவசித்தி ஒருவனுக்குத் தான் அவ்விஷத்தின் மாற்று தெரியுமென்று தனக்குக் கூறியதாகவும், நான் இப்பொழுது அவனுக்குக் கிடைத்தது தன் பூஜாபலனென்றும், எப்படியாவது அம்மருந்தைத் தனக்குத் தெரிவித்தால் தன் ராஜ்யத்தில் பாதி தருவதாயும் எழுதியிருந்தது!—என்ன ஆச்சரியம் என்னைத்தான் அந்த குருவென்று நினைத்துக்கொண்டாற் போலிருக்கின்றது!

ஜெ. உம்—அப்புறம்.

ஏ. நான் அதைப் பார்த்தவுடன் சௌரியகுமாரன்தான் எனக்குத் தீங்கு செய்தவன் என்று உறுதியாய்ப்புலப்படவே எனக்குண்டான கோபம் இவ்வளவ்வளவன்று! கோபத்தினால் சற்று நேரம் அசைவற்றுப் போயினேன். இதை அவன் அறிந்து கொண்டானோ என்னவோ திடீரென்று எழுந்திருந்து அறையை விட்டு ஓடிப்போய் விட்டான். பிறகு அங்கு சற்றுநேரத்துக்குள் அவன் வராமற் போகவே, நீ சொன்ன சங்கதிஞாபகம் வந்து இதுதான் சமயமென்று, நான் நீ கொடுத்த ஓலைகளில் அங்கிருந்த ராஜ முத்திரையைப் பதித்துக்கொண்டு வெளியிற்சென்றேன்.

ஜெ. எங்கே அந்த ஓலைகள்? கொடுமிப்படி.

ஏ. இதோ. (ஓலைகளைக் கொடுக்கிறான்.) பிறகு பிதாவின் பிரேதம் வைத்திருக்கிறதென்று நீ குறித்த அறைக்குட் சென்றேன்—அப்பா! அங்கு அவரை நான் கண்டபொழுது—(முகத்தைக் கையால் மூடிக்கொண்டு தேம்பி அழுகிறான்.)

ஜெ. ஐயனே! இது பிரபஞ்ச வழக்கம். பிறந்ததெல்லாம் இறக்க வேண்டுமென்பதை மறந்தீரா? நாமும் ஒரு நாள் இறக்க வேண்டியதுதானே! தைரியத்தைக் கைவிடாதீர்.

ஏ. அப்பா! என்னிடம் ஒரு வார்த்தையும் கூறாது சென்றாரே! நான் அபராதி என்று எண்ணியன்றோ இறந்

தார். உண்மையையறிந்து என்மீது கொண்ட கோபம் தணிந்தபின் இறந்திருக்கலாகாதா ! நான் அவ்வளவு பாக்கியம் பண்ணுமற்போனேனே !

**ஜெ.** ஐயனே ! வருந்தாதீர். இனி என்ன செய்வது ! நடந்து விட்டது ! மேல் நடக்கவேண்டிய காரியத்தைப்பற்றி யோசிப்போம். அப்புறம்.

**ஏ.** பிறகு நான் அவர் பாதத்தை என் இருகண்ணிலும் ஒத்திக் கொண்டு சற்றுநேரம் விசனப்பட்டு விட்டு, காலமாய் விட்டதென்று பயந்து வெளியில்வந்து நீ சொன்னபடி அரண்மனையின் மேலைக்கோபுரவாயிலில் வந்து உன்னைக்கண்டேன். அவ்வளவே நடந்த சமாசாரம் ; அப்பா, நான் என்மனைவி மக்களை ஒரு முறை பார்த்து விட்டு வரவேண்டுமென்றிருந்தேன் : நீ ஓரே பிடியாய் என்னை இழுத்துக்கொண்டு வந்து விட்டாயே !

**ஜெ.** ஐயனே ! அதைப்பற்றித் தாம் வருந்த வேண்டாம். சீக்கிரம் அவர்களை நீர் பார்ப்பீர்—நாம் இனி ஒருக்ஷணமும் வீணிற் கழிக்கலாகாது. அரசே நம்முடைய கள்வரெல்லாம் எங்கிருக்கின்ருர்கள் ? அழையும் அவர்களை இங்கு, நான் இதோ வந்துவிட்டேன் (கோட்டைக்குள் செல்கிருன்.)

**ஏமாங்கதன்** தாரையெடுத்தூத கள்வரெல்லோரும் வந்து சேர்கிருர்கள்.

**நா.** சாமி ! ஏன் எங்களை அழைத்தீர்கள் ?

**ஏ.** சற்றுப்பொறுங்கள் சொல்லுகிறேன் ; உங்கள் பழைய சுவாமி வந்திருக்கின்ருர் ; அவர் உங்களையெல்லாம் வரவழைக்கச் சொன்ஞர்.

**நா.** சித்தம் (ஒருபுறமாகப் போய்) அடே ! கோஸ்கி அப்புறம் வயத்தானைப்பற்றி ஏதாவது தெரியுமா ?

**கோ.** அவன் எப்படியும் தப்பிச்சுக்குவா ஐயா ! அவனு ஆப் பிட்டுக்கிறவே !—அடே ! இதோவர்ரானே ! அடே ! வயத்தான் என்ன மாடா தப்பிச்சிகினே !

வயத்தான் வருகிருன். கள்வரெல்லோரும் சந்தோஷமாய்க் கூச்சலிடுகின்ருர்கள்.

**வ.** அடெபோடா ! தப்பிச்சிகினு வந்தூட்டேன் சரிதான் ; ஆனு அந்தலட்டு உட்டூட்டு வந்தூட்டேண்டா.

**நா.** அதிருக்கட்டும் எப்படி தப்பித்துக்கொண்டு வந்தாய் ? என்ன சமாசாரம் ?

ஜெயபாலன் வருகிறான்.

**ஜெ.** வயத்தான்! எப்படித் தப்பித்துக்கொண்டு வந்தாய்? நடந்த சமாசாரம் என்ன?

**வ.** நான் தப்பிச்சிக்க மாட்டேனு சாமி! என்னெபுடுச்சிம் போயி சின்ன ராஜாகிட்ட வுட்டாங்கோ, அவர் என்னை பாத்துட்டு, அடே வேறொருத்தனே புடிச்சிகினு வந்தைங்கடா, இண்ணு அவங்களையே கோவிச்சிகிறாரு; அப்புறம் எங்கிட்ட அந்த உடுப்பெல்லாம் எப்படி வந்துது இண்ணு கேட்டாரு; நான் யாரோ ஒருத்தன் வந்து என் கிழிஞ்ச உடுப்பெ கொடுத்தூட்டு இதை வாங்கிகிறையா இண்ணு, நான் வாங்கிகினே இண்ணு சொல்லி அசல் பயித்தியக்கார னெப்போல வேஷம்போட்டேன். அப்புறம் ராஜா எனக்கு நிஜமாலும்பயித்தியமா இல்லையா இண்ணு பாக்கிரத்துக்காக நிஜத்தை சொல்லும்படி என்னை அடிக்கச் சொன்னாரு—நானு சொல்ரவேன்! நீங்க உதைக்கிரதை உதைங்க, நிஜம் வருதா பாருங்க இண்ணு நினைச்சிகினு, அப்பவும் பயித்தியக்காரனைப் போலவே பாசாங்கு போட்டு பாடிகினு இருந்தேன்; அப்புறம் ராஜா இவனை இந்த அறையிலேயே போட்டு அடைச்சி வையுங்கோ நாளைக்கி விசாரணை பண்ணலாமிண்ணு சொல்லி, என்னை அரண்மனையிலே ஒரு அறையிலே அடைச்சூடச் சொன்னார்; அது மடப்பள்ளிக்கி பக்கத்திலே யிருந்தது. பாதிராத்திரியிலே மொள்ள அந்த கதவெ பேத்து குனு மடப்பள்ளிக்குப் போயி அங்கே இருந்ததையெல்லாம் பரபர இண்ணு திண்ணூட்டு, அங்கே ஒரு சேவகன் படுத்துக்கினு தூங்கிகினு இருந்தான். அவனைக் கொண்ணூட்டு, அவன் உடுப்பை நான் போட்டுகினு நேராகோபுரவாசல் வழியாவே எல்லாருக்குமுன்னே வந்தூட்டேன் சாமி.

**ஜெ.** வயத்தான்! உன் புத்திக்கு மெச்சினே! உனக்கென்ன வேண்டும் கேள்,

**வ.** ஒண்ணும் வேணும் சாமி! அங்கே அவசரத்திலே லட்டெ மறந்து வைச்சூட்டு வந்தேன். அதுக்குபதிலாக நம்ப குகைக்குள்ள மான்கறிவாசனே வருது, அதிலே நான் திண்ரமட்டும் கொடுக்கச் சொல்லுங்க.

**ஜெ.** சீ! இவ்வளவுதானா! அப்படியே தின்னுபோ!

**வ.** பலே! பலே! நல்லசாமி! நல்லசாமி! (குகையின் பக்கமாய்ப் போகிறான்.)

**ஜெ.** அரசே! உமது கோரிக்கை நிறைவேறும் காலம் வந்து விட்டது இனி வியசனப்படாதீர் நீர்! நாயனுர், நீ நமது கோட்டையிலுள்ள கள்வர்களை யெல்லாம் குடியானவர் களைப்போல் மாறு வேடம் பூணச்செய்து அழைத்துக் கொண்டு பெருமலைத் துர்க்கத்தினிடம் செல்லவேண்டும் பிறகு நீமாத்திரம் தனியாக சௌரியகுமாரனுடையசேவ கர்களுள் ஒருவனைப்போல் வேடம்பூண்டு இந்நிருபத்தை பெருமலைக்கோட்டையிலுள்ள புஷ்ப புரத்துச் சேனுதி பதி சித்ராயுதனிடம் கொடுத்துவிட்டு, ஒன்றும் பேசாது திரும்பிவந்து நம்மவரைச் சேர்ந்திரு பழயபடி. பிறகு சீக்கிரம் காலசேனன் முதலியோருக்கும் சித்ராயுதனுக் கும் பெரும்போர் விளையும். அப்பொழுது சமயம் பார்த்து, நமது கள்வரைக் கொண்டு சித்ராயுதனுடைய பாசறையைக் கொள்ளையடித்துத் திரும்பி குமாரபுரத் தருகில் சீக்கிரம் வந்து சேர். இதற்கு என்ன வேண் டுமோ அதன்படியெல்லாம் செய்வாய் என்று உறுதி யாய் நம்பி உன்னிடம் நான் இவ்வேலையை ஒப்பி வைத் திருக்கின்றேன். ஜாக்கிரதை உடனே புறப்படு, கால தாமதஞ் செய்யாதே.

**நா.** ஐயனே, சீக்கிரத்தில் தாம் சொன்னபடி நான் செய்த தாகவாவது கேட்பீர், அல்லது நானும் நமது கள்வரும் இறந்ததாகவாவது கேட்பீர். (போகிருன்).

**ஜெ.** கோஸ்கி, நீ இந்நிருபத்தை ஏமாங்கதராஜனிடமிருந்து வந்ததாகக்கூறி கல்யாணபுரத்து அரசராகிய சதானந்த ராஜனிடம் கொடுத்துவிட்டு சீக்கிரம் திரும்பு; சீக்கிரம் இந்நிருபம் அவரிடம் சேரவேண்டும். அரசே, உம் முடைய மோதிரத்தை இப்படித்தாரும், யாராவது உன்னை அரண்மனையினுள்ளே விடமாட்டேனென்ருல் இம்மோதிரத்தைக்காட்டி ஏமாங்கதராஜனிடமிருந்து வந்தேன் என்றுகூறு விட்டுவிடுவார்கள். இந் நிருபம் எப்படியும் நாளை சாயங்காலத்திற்கு முன் சதானந்த ராஜன் கையிற் சேரவேண்டும் தெரியுமா ?

**கோ.** அப்படியே சாமி, இதோ புறப்பட்டேன். (போகிருன்).

**ஏ.** அப்பா! எனக்கு நீ செய்வதெல்லாம் ஆச்சரியமாயிருக் கின்றது இதென்ன சமாசாரம்? என்ன நிருபங்களிவை?

**ஜெ.** அரசே, சொல்லுகின்றேன்கேளும். நாயனுர் எடுத்துச் சென்ற நிருபம் சௌரியகுமாரனுடைய சேனுதிபதி யாகிய சித்ராயுதன் கையிற்பட்டவுடன் அவர்களுக்கு

இப்பொழுது உதவியாயிருக்கும் காலசேனன் முதலிய சிற்றரசர்களுடனேயே அவன் போர் புரிவான்; அப் பொழுது சித்ராயுதனுடைய பாசறை நமது கள்வர் களால் கொள்ளை யடிக்கப்படும். இதற்குள் கோஸ்கி எடுத்துச்சென்ற நிருபத்தின்படி உமது மாமா அவர் கள் உமக்குத் துணையாகத் தமது சைனியத்தை அழைத் துக் கொண்டு குமாரபுரத்துக்கு வந்து சேர்வார். நாமும் நம்முடைய மற்றக்கள்வர்களை யெல்லாம் அழைத்துக் கொண்டு அவரைச் சந்திப்போமாகில், பிறகு நடக்க வேண்டிய விஷயங்களைப்பற்றி அப்புறம் யோசிப்போம்; இப்பொழுது நாம் கால தாமதஞ் செய்யலாகாது, புறப் படுவோம் சீக்கிரம் வாருங்கள்.

ஏ. அப்பா, என் மாமாவை உனக்கெப்படித் தெரியும்? சித் ராயுதன் இருக்குமிடம் முதலிய விஷயங்களையெல்லாம் நீ எப்படி அறிந்தாய்? அப்பா! இப்பொழுதாவது கூறமாட்டாயா நீ யாரென்று?

ஜெ. ஐயனே! எனக்கு வாக்களித்ததை மறந்தீரோ? ஒரு காலம் வரும் அப்பொழுது எல்லாம் உமக்குக் கூறுகின் றேன்; இப்பொழுது சீக்கிரம் புறப்படும் வகையைப் பாரும். (எல்லோரும் போகிறார்கள்.)

காட்சி முடிகிறது.

---

## நான்காவது காட்சி.

இடம்:—புஷ்பபுரியில் சிறைச்சாலை

சௌமாலினி தன் சிறுகுழந்தையைக் கையில்வைத்துக்கொண்டு ஒரு புறமாக உட்கார்ந்திருக்கிறாள். பாலசூரியன் மற்றொருபுறம் நித்திரைசெய்கிறான். நடுவில் திரையிட்டிருக்கிறது.

சௌ. கண்ணே பாலகா! இது நீ முன்ஜன்மத்திற் செய்த பாவத்தின் பயனோ? அல்லது என்வயிறுசெய்த கொடுமையோ? அரண்மனையில் நீ சகலசுகத்துடன் பிறப்பதைவிட்டு இக்கொடிய சிறைச்சாலையில் பிறக்கும் படி நேரிட்டதே! மன்னர் மன்னனுக்குப் புதல்வனாய்ப் பிறந்தும் இக்கதியிலிருக்கும்படி நேரிட்டதே! உன் தலை விதி அது! சுசங்கதா தேவியாகிய உன் நல் அத்தை நீ அருந்த பால் கொண்டுவருமளவும் கண்வளராய்! கண்ணே! கண்வளராய்! (குழந்தையைத் தாலாட்டுகின்றாள்.) கண்ணே! அந்தமட்டும்நாங்கள்படுந்துயரமொன்றையும் அறியாதிருக்கின்றாயே! உனக்கு அரண்மனையிலிருப்பதும் இந்த பயங்கரமான சிறைச்சாலையிலிருப்பதும் எல்லாம்

ஒன்றுதான். உன்னைப்போல் ஒன்றும் தெரியாத ஸ்திதியில் நாங்களும் இருப்போமாகில் !—

சுசங்கதை ஒரு கிண்ணத்தில் பாலைக்கொண்டுவருகிருள்.

சு. அம்மா, குழந்தை எப்படியிருக்கின்றது ?

சௌ. அரண்மனையிலிருந்தால் எவ்வளவு சுகமாயிருக்குமோ அவ்வளவு சுகமாயிருக்கின்றது ! சற்று முன்பாக பசியால் அழுது கொண்டிருந்தது, நான் பாலின்றி உறங்கப் படுத்தினேன்.

சு. இதோ நான் கொண்டுவருகின்றேன். ஆயினும் இப்பொழுது அதை எழுப்பவேண்டாம் அதுவாக எழுந்தவுடன் கொடுக்கலாம்.

சௌ. அதிருக்கட்டும் சுசங்கதா, உன் தமையனிடம் சொல்லச் சொன்னேனே, என்னவாயிற்று அக்காரியம் ?

சு. அம்மா! நான் எவ்வளவோ சொல்லிப்பார்த்தேன், அவர் இசையாது ஒரே பிடிவாதமாயிருக்கின்றுர்.

சௌ. சுசங்கதா ! அவருக்கு இரக்கமில்லையோ ! ஆணோடு பெண்ணோடு பிறந்திலரோ ! பழிபாவத்திற்கஞ்சாரோ ? ஐயோ ! எங்கள் முகத்தைப் பார்த்திரங்காவிட்டாலும் இக்குழந்தையின் முகத்தையாவது பார்த்திரங்கலாகாதா ? இப்பேதைப்பாலகனும் அவருக்கென்ன குற்றம் செய்தது ? என்னை என் கணவரிடம் சேர்த்துவைக்கா விட்டாலும்நாங்கள் இந்தபாழும் சிறையைவிட்டு அரண்மனையிலோர் மூலையிலிருக்கச் செய்யலாகாதா! எங்களை எவ்வளவு காவலில் வேண்டுமென்றுலும் வைக்கட்டுமே! எங்கள் மூவரையும் இச்சிறையிலேயே இறக்கச்செய்ய வேண்டுமென்றெண்ணியிருக்கின்றுரோ ! நான் பிரசவ வருத்தமுற்ற பேதையென்றும் எண்ணுரோ ! அம்மா ! நீயாவது சொல்லடி அவர் மனம் என்னகல்லடி ?—என் வருத்தத்தையெல்லாம் நீயாவது அவருக்குரைக்கலாகாதா நன்றுய் ?

சு. அம்மா, நீ என்னை நிந்தித்துக்கொள்ளாதே ! நான் அவனிடம் கூறியதை யெல்லாம் இக்கருங்கல்லினிடம் கூறியிருப்பேனுயின் இதுவும் இரங்கியிருக்கும்; அப்பாதகன் மனம் சற்றேனும் இரங்காமற்போயிற்று. அவனை அண்ணன் என்று மதிப்பதையேவிட்டேன். அம்மா, நான் என்ன செய்வேன் ?

சௌ. அவரைநொந்து பயனென்ன ! பாலசூரியன் கூறுகிறபடி சுவாமிக்கே மனம் இரங்காமற்போனுல் மனிதர்களுக்கு மனம் இரங்கப்போகின்றதோ, சுசங்கதா, என்

பிராணநாதரைப்பற்றி ஏதாவது சமாசாரம் வந்ததோ? யாரையோதேட விட்டிருக்கின்றதாகக் கூறினையே?

சு. மெள்ளப்பேசு. ஒரு சமாசாரமும் வரவில்லை. நான் அனுப்பியிருக்கின்ற ஆட்களில் ஒருவனும் திரும்பிவரவில்லை இன்னும்.

சௌ. ஐயோ! அவருடைய முகத்தை நான் தினம் ஒரு முறையாவது பார்த்துக்கொண்டிருப்பேனாயின் இந்தச் சிறைச்சாலையில் நான் படும் துயரமென்பதையும் பாரேனே! அப்பொழுது இந்தச் சிறைச்சாலையே எனக்கு சுவர்க்கமாகும்.—ஏது, இனி நான் அநேக நாள் ஜீவித்திருப்பது கடினம். என் உயிரை அப்பொழுதே விட்டிருப்பேன், ஆயினும் இக் குழவியைப்பற்றியும் பாலசூரியனைப்பற்றியும் இத்தனைகாலம் உயிர்தரித்து வந்தேன்—அம்மா, சுசங்கதா, நீ எனக்கொரு உதவிசெய்வாயா?

சு. அம்மா, என்னால் முடியுமானால் செய்கின்றேன்.

சௌ. இந்தச் சிறைச்சாலையைவிட்டுத் தப்பிப்போக மார்க்கமில்லையா?

சு. அம்மா, நான் முன்பே அதையும் யோசித்துப் பார்த்தேன்; எனக்கொரு மார்க்கமும் தோற்றவில்லை. நான் சௌரியகுமாரன் உத்திரவு பெற்று இங்குவந்துபோவதே கடினமாயிருக்கின்றது; நான் என்ன செய்வேன்?

சௌ. அம்மா, நீ என்னைப்போலொரு பெண்தானே, உனக்குமேன் எங்கள் மீது இரக்கமில்லாமற்போயிற்று?

சு. (எழுந்திருந்து) அம்மா, அப்படி கூறவேண்டாம். இதோ நான்போய் கடைசிமுறை சௌரியகுமாரனுடன் பேசிப்பார்க்கின்றேன்; ஆயினும் அவன் இரங்குவான் என்று நான் நினைக்கவில்லை. பிதா இறந்து இரண்டு தினங்களாவதற்கு முன் தனக்குப் பட்டாபிஷேகம் செய்துகொண்டபாபிக்கு கருணையெங்கிருந்துவரும்? ஆயினும் உனக்கொன்று சொல்லுகின்றேன். சீக்கிரத்தில் உன்னை இச்சங்கடத்தினின்றும் நீக்கி உன் பர்த்தாவுடன் சேர்த்தாவது வைப்பேன் அல்லது நானாவது இம்முயற்சியில் இறப்பேன், என் வார்த்தையின் உண்மையைப் பார். (போகிறாள்)

சௌ. அம்மா, உன்னை சுவாமி காப்பாற்றுவார்!—ஐயோ! பாற்கடலில் அமிர்தத்திற்குமுன் விஷம் உதித்தாற்போல் உனக்குமுன் சௌரியகுமாரன் உதித்திருக்கின்றானே!

[பாலசூரியன் திடுக்கிட்டு கண்விழித்து எழுந்திருக்கின்றான்]

**பா.** அப்பா! அந்தமட்டும் கனவுதான்! ஈசனே! இதுவும் உம்முடைய சோதனையோ? எல்லாம் உனதருள்! இக் கனவு மெய்க்குமாயின் ஏழையேன் என்செய்வேன்? தாம் தம்முடைய திருப்பாதத்தால் உதைத்த போதிலும் நாயேன் அப்பாதத்தையே கதியாகப்பற்றவேண்டும்! எல்லா மும தருளே!

**சௌ.** கண்ணே! பாலசூரியா விழித்துக்கொண்டாயா?

**பா.** ஆம் அம்மா, நான் உள்ளே வரலாமா?

**சௌ.** வரலாம் கண்ணே. (பாலசூரியன் திரையைத்தள்ளிக் கொண்டு சௌமாலினியிடம் போகிறான்.)

**பா.** அம்மா, உங்களுக்கு உடம்பென்னமாயிருக்கின்றது?

**சௌ.** இருக்கின்றது; கண்ணே! என்ன உனக்கு இத்தனை நாள் இருந்த முகமலர்ச்சி இல்லை, என்ன சமாசாரம்?

**பா.** ஒன்றுமில்லை அம்மணி.

**சௌ.** இல்லை கண்ணே! என்னிடம் சொல்ல உனக்கென்ன? என்ன வாடியிருக்கின்றாய்?

**பா.** ஒன்றுமில்லை அம்மா, சற்றுமுன்பாக நான் மெய்ம் மறந்து உறங்கினேன். அப்பொழுது நான் ஒரு கனவு கண்டேன், அது சற்று மனசஞ்சலத்தை யுண்டுபண் ணிற்று வேறொன்றுமில்லை.

**சௌ.** என்ன கனவு?

**பா.** நான் ஒரு மலையின்மீது நின்றுகொண்டு கீழ்ப்பிரதேசங் களின் செழுமையையும்அழகையும் பார்த்து சந்தோஷித் துக்கொண்டிருப்பது போலவும், உடனே திடீரென்று ஒரு பெரும் இருள் என்னை சூழ்ந்துகொண்டது போல வும் கனவுகண்டேன். இது ஒருவேளை இனிவரப் போகின்ற ஏதாவது ஒருகெடுதிக்கு அறிகுறியாயிருக்கின் றதோ என்னவோ வென்று மனதிற்பட்டது. வேறொன் றுமில்லை;—அம்மா! என்ன கண்ணீர் விடுகின்றீர்கள்?

**சௌ.** அடா! என் கண்ணே! இதுவரையில் இந்தச் சிறைப் பட்டது முதல் நீதேறுதல் சொல்ல நான் என் வருத்தங் களை யெல்லாம் பொறுத்து வந்தேன். இது வரையில் நீ வருந்தாதிருந்ததைப் பார்த்து நானும் தைரியங் கொண்டிருந்தேன். இப்பொழுது நீயேவருந்துகின்றாயே நான் என்ன செய்வது!

**பா.** அம்மா, அப்படி எனக்கொன்றும் நேராதென்றே நினைக் கின்றேன். இல்லை அப்படி ஒருகால் நேரிட்டாலும் ஈச னொருவனிருக்கின்றான். நீர் ஏன் துயருறவேண்டும்?

"இட்டமுடன் என் றலையில் இன்னபடி என்றெழுதி, விட்ட சிவனுஞ்செத்து விட்டானோ"?

**சௌ.** அந்த ஈசனுக்குத் தான் கண்கெட்டுப்போயிருக்கின்றதே! இல்லாவிட்டால் பாபியாகிய சௌரிய குமாரனை மகாராஜாவாக்கி, நம்மை இக்கதிக்குக் கொண்டு வருவானோ?

**பா.** அம்மா, நாம் அப்படிச் சொல்லலாகாது! சுவாமியினுடைய திருவுள்ளம் ஒரு வழி நிற்பதற்கு நாம் காரணம் கேட்கலாகாது மனிதர்களால் அது அறியக் கூடாத விஷயம். நாம் அதைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ள வேண்டியதே நம்முடைய கடமை; ஒருவேளை நம்முடைய நன்மையைக்கோரியே அவர் இவ்வாறு செய்திருக்கினு மிருக்கலாம், அவர் திருவருள் நமக்கிப்பொழுதில்லை போலும்.

**சௌ.** ஆமாம், இப்பொழுது நாம் துக்கமனுபவிக்கின்றோமே அதற்கென்ன செய்வது?

**பா.** அதை நாம் துக்கமென்று கொள்ளலாகாது! இதையே நாம் சுகமென்று பாவிப்போமாகில்! நாம் எந்த துக்கமான சந்தர்ப்பத்தில்வைக்கப்பட்டபோதிலும் அதிலும் சுகத்தைக் கண்டு பிடித்து அதையே எண்ண வேண்டும்.

**சௌரியகுமாரன்** இரண்டு சேவகர்களுடன் வருகின்றான்.

**சௌ.** அப்பா, இங்கேயும் எமன் வருகின்றான்! இன்னும் நமக்கென்ன துன்பம் செய்யப்போகின்றானோ!

**பா.** குடியைக்கெடுத்த சிற்றப்பா! என்ன சமாசாரம்?

**சௌ.** அப்பா, அவர்களுக்குவீணுகக் கோபம்வரும்படியாக ஒன்றும் சொல்லாதே.

**சௌரி.** அம்மணி. தங்களை யெல்லாம் சிறையினின்றும் விடுவித்து என் தமயனிடம் அனுப்புவிக்க வந்திருக்கின்றேன் நான்.

**சௌ.** அப்பா! இப்பொழுது இரக்கம் வந்ததே! உமக்கு மிகவும் புண்ணியமுண்டு. நீர் எங்களுக்கு இந்த உபகாரம் செய்ததை தெய்வம் மறக்காது. ராஜகுமாரா, இப்பொழுதே திறந்து விடும்படியாகக் கட்டளையிடும்.

**சௌரி** இதோ சொல்லுகின்றேன்—ஆனால் ஏமாங்கதராஜன் எங்கிருக்கின்றார்.

**சௌ.** தெரியாதே!

**சௌரி.** அம்மா, உண்மையைக்கூறும் பொய் பேசாதீர்!

**சௌ.** உண்மையாக எங்களுக்குத் தெரியாது?

**சௌரி.** பாலசூரியா! உனக்குத்தெரியும்! உண்மையைக்கூறு உங்களைச்சிறையின்றும் விடுவிக்கின்றேன்.

**பா.** உண்மையாக எனக்குத்தெரியாது! அப்படித் தெரிந்திருந்த போதிலும் உமக்கு நான் கூறுவேனே! என் பிதாவைத்தான் நாட்டைவிட்டுத் துரத்தினீரே! இப்பொழுது அவர் எங்கிருக்கின்றாரென்று கண்டறிந்து இன்னும் ஏதாவது தீங்கு செய்யப்பார்க்கின்றீரோ?

**சௌரி.** பாலசூரியா! இப்பொழுது உன்னுடன் வார்த்தையாடிக்கொண்டிருக்க எனக்குக் காலமில்லை, உன் பிதாவிருக்குமிடம் உனக்கிப்பொழுது தெரியும்; நீ கூறுவாயாயின் உங்களை யெல்லாம் சிறையினின்றும் விடுவிக்கின்றேன். அம்மணி, உங்களுக்கு சிறையினின்றும் வெளியேவர வேண்டுமென்று விருப்பமிருந்தால் இதைத் தெரிவியும். என்னசொல்லுகின்றீர்கள்?

**சௌ.** ஐயோ! எங்களுக்குச்சத்தியமாக ஒன்றும் தெரியாதே! தெரிந்தால் சொல்லமாட்டோமா? ராஜகுமாரா! சற்று முன்பாக மனம் இரங்கினீரே, இதற்குள் முன்போலவாகி விட்டீரே! ஐயோ! நாங்கள் இச்சிறையில் இன்னும் எத்தனை தினம் அவஸ்தைப்படுவது? இன்னும்சில தினங்கள் இங்கிருப்போமாயின் எங்கள் உயிர் போய்விடும்; இந்த அவஸ்தையில் எப்படி யாவது மனமிரங்கும்!

**பா.** அம்மா! அவர் நம்மை சிறையினின்றும் விடுவிப்பதற்காகவா வந்தார் என்று நினைத்தீர்?—சிற்றப்பா! இந்த சூழ்ச்சி எங்கேகற்றீர்?—ஆயினும் சத்தியமாக எனக்கு பிதா இருக்குமிடம் தெரியாது!

**சௌரி.** உன்னை கடைசிமுறை கேட்கிறேன், உனக்குத் தெரியுமென்றெனக்குத்தெரியும், சொல்லுகின்றாயா மாட்டாயா?

**பா.** நான் தெரிந்ததை முன்பேசொன்னேன்.

**சௌரி.** பொய்பேசாதே! இதே கடைசிமுறை. இப்பொழுது நீ கூறாவிட்டால் உன்னிருகண்களையும் பெயர்த்து விடுவேன்! என்ன, சொல்லுகின்றாயா! என்ன?

**பா.** எனக்குத் தெரியாது.

**சௌரி.** உன்னிடமிருந்து உண்மையை வரவழைக்கும் விதத்தில் வரவழைக்கின்றேன். அடே! சேவகர்களே! நீங்களிருவரும் உள்ளேபோய் பாலசூரியனைப் பிடித்து வாருங்கள் வெளியே!

**சௌ.** ஐஐயோ! ராஜகுமாரா! ராஜகுமாரா! அவனுக்கொன்றும் தெரியாதே அவன் அறியாப்பாலகனாயிற்றே! அவனுடைய கண்களையா பெயர்க்கப்போகின்றீர்? அதைக் கண்டு நான் எவ்வாறு உயிர்வாழ்வேன்! அதை விட என்னுடைய கண்களைப் பெயர்த்துவிடுமே. ராஜகுமாரா ராஜகுமாரா! உமக்கு ஈவு இரக்கமில்லையா! சற்றாயினும் மனமிரங்கலாகாதா! என் பாலனது கண்களைப் பிடுங்கும்படிக் கட்டளையிட உமது மனம் கல்லோ! உம்முடைய தமயனுடைய குழந்தையென்று மனமிரங்கலாகாதா! ஐயோ! இதற்கோ பாபி நானவனைப்பெற்றேன். ஐயோ! இந்த நாட்டில் நியாயமனியாயமில்லையா! தெய்வத்திற்குத்தான் கண் அவிந்து போயிற்று!

**சௌரி.** அடே! செல்லுங்கள் உள்ளே! (சேவகர்கள் சிறைச்சாலைக்குட் போகிறார்கள்.)

**சேவகர்கள்.** ராஜகுமாரா தாமாவருகின்றீரா நாங்கள் இழுத்துக்கொண்டு போகவேண்டுமா?

**பா.** அப்பா, இதோ நானாகவந்துவிட்டேன். இதோ என தன்னையிடம் விடைபெற்று வருகின்றேன்—

**சௌ.** ராஜகுமாரா! யமகிங்கரர்கள்வந்து விட்டார்களே! வந்து விட்டார்களே! இந்தவேளை எங்களைக்காப்பாற்றும்! ஐஐயோ! என்பாவிக்கண்களைப் பறித்து விடுமே! என்பாலனைச் சும்மா விட்டு விடும். உமக்குக்கோடி புண்ணிய முண்டு. ஐயோ! இதைவிட என்னையாவது கொன்றுவிடுமே முதலில்!

**சௌரி.** அப்பா, நான் இவள் கூறுவதைக் கேட்டால் என் மனதைக் கரைத்து விடுவாள் (காதைமூடிக்கொள்கிறான்.)

**பா.** (தன் அன்னையிடம் சென்று) அம்மா!—அம்மணி! இனி வருந்தி என்னபயன்?—வருத்தப்படாதீர்! மனதைத் தைரியப்படுத்திக் கொள்ளுங்கள்!—எனக்கு விடையளியும் நான் போய்வருகின்றேன்!—யாவும் ஈசன் செயல்!

**சௌ.** (பால சூரியனைக் கட்டிக் கொண்டு) கண்ணே! கண்ணே! பாலசூரியா! என்வயிறுசெய்த கொடுமையடா இது! என் அருஞ்செல்வமே! இந்த விதியனுபவிப்பதற்கோ உன்னை இப்புவியிற் பெற்றெடுத்தேன்! பெற்றெடுத்தேன்! அடாமகனே! என் பாவிவயிறு எரிகின்றதே!

**பா.** அம்மா, தம்முடைய வயிற்றிற்பிறக்கும் படியான பாக்கியம் நான் பண்ணினேன்! அம்மணி, நேரமாகின்றது நான் தமக்கென்ன தேறுதல் சொல்லப்போகின்றேன்

இனி! சுவாமிதான் தேறுதல் சொல்லவேண்டும்! எனக்கு விடையளியும்.

**சௌ.** கண்மணி! இப்படியும் இருந்ததா உன் விதி! நீ உலகாளக் கண்டு நான் களிக்கலாமென்றிருந்தேனே, இப்பொழுது அந்தகனாய்க் கிடப்பதை எப்படி கண்டு என் மனம் தரிக்குமடா என்மகனே!

**பா.** அம்மா! யார் விதி யாரைவிட்டது! நீர் வருந்தி என்ன பயன்? அவரவர்கள் வந்த வழி அவரவர்கள் செல்ல வேண்டுமல்லவா? இனி என்ன செய்யலாம்?

**சௌ.** அடா, என் வீரச்சிங்கமே! உன் மதிபோன்ற முகத்தைப் பார்த்தன்றோ உன் பிதாவைவிட்டுப் பிரிந்தபின் உயிர் வாழ்ந்து வந்தேன். இப்பொழுது உன் முகத்தில் கண்கள் போய் நீ அந்தகனா யிருப்பதைப்பார்த்து நான் எப்படி உயிர்வாழ்வேன்! இக்கதி அனுபவிப்பதற்கோ என்பாவி வயிற்றிலுதித்தாய்!

**பா.** அம்மா! என் ஊனக்கண்ணைத்தானே கெடுக்கப்போகின்றார்கள்? என் ஞானக்கண்ணை அவிக்க இவர்களால் முடியுமோ! அதிருக்குமளவும் எனக்கென்னகுறை? அம்மணி, நீர் வருந்தி என் மனோதிடத்தைக் கலக்காதீர்!

**சௌ.** அடாபாலகா! உனக்குப் பதிலாக என்னுடைய கண்களை எடுத்துக்கொள்ள மாட்டார்களா? என்னுயிரை உனது கண்களுக்குப் பதிலாகக் கொடுக்கின்றேனே! இப்பாபிகள் ஏற்றுக்கொள்ளாரோ?

**சௌரி.** அடே சேவகா! என்ன காலதாமதம்?

**சே.** ராஜகுமாரா, வாரும் சீக்கிரம் நேரமாய் விட்டது.

**பா.** அம்மணி, நான் என்ன உமக்குத் தேருதல் சொல்லப் போகின்றேன்? உமது மனதை நீரே தேற்றிக்கொள்ளும், எல்லாம் ஈசன் செயல்; எல்லாவற்றிற்கும் அவர் ஒருவர் இருக்கின்றார். அம்மா! என்னை சந்தோஷமாய்ப் போய்வா என்று விடையளியும்.

**சௌ.** கண்ணே! கண்ணே! உனது கண்களை அழிக்க இப்பாதகர்கள் உன்னைக் கொண்டுபோகும் பொழுது நான் எப்படிச் சந்தோஷமாய் போய்வாஎன்று உனக்கு விடையளிப்பேன். உன்னைப்பெற்ற என்வயிறு எரிகின்றதே!

**சே.** வாருமையா சீக்கிரம்!

**பா.** என்னைப்பெற்ற தாயே, நான் போய்வருகின்றேன். என் பாவிக் கண்களினால் உமது திருமேனியை இவ்வுலகில் கடைசிமுறைக் காண்கின்றேன். நான் கொடுத்துவைத்தது இவ்வளவுதான்! (காலில் வீழ்ந்து கதறி அழுகின்றான்.)

**சௌ.** (கெட்டியாயவனைக் கட்டியணைத்துக் கொண்டு) கண்ணே! கண்ணே! நான் உன்னை விடேன்! விடேன்! என்னைக் கொன்றுவிட்டு இப்பாதகர்கள் உன்னை என்கையினின்றும் இழுத்துக்கொண்டு போகட்டும்!

**சௌ.** அடே! இழுத்துக்கொண்டு வாருங்களடா அவனை நீங்களும் என்ன அங்கே நின்று அழுதுகொண்டிருக்கின்றீர்கள்?

**சௌ.** நான் விடேன் என்பாலனை! அடாபாதக ராஜகுமாரா! என்னைக் கொன்றுவிட்டு என் பிள்ளையை இழுத்துக் கொண்டு போகச்சொல்!

**சௌரி.** அடே! என்ன, இழுத்துக்கொண்டுவருகின்றீர்களா என்ன!

**சௌ.** அடா! பாதகா! உனக்கு நான் உங்கள் குலப்பெண்ணென்று சற்றேனும் மானமில்லாமற் போய் விட்டதா! என்னைத்தீண்டியா பாலசூரியனை இழுத்துக்கொண்டு வரும்படி கட்டளையிடுகின்றாய்?

**சௌரி.** அடே! கழுதைகளா! நான் சொன்னபடி செய்கின்றீர்களா என்ன? (சேவகர்கள் பாலசூரியனருகிற்செல்கின்றனர்)

**பா.** அம்மா, சிற்றப்பனுக்குத் தான் மான மில்லாமற் போனாலும் எனக்கு இருக்கின்றது. என் உயிரிருக்குமளவும் ஒரு அன்னியன் உம்மைத்தீண்ட நான் பார்ப்பேனோ? எனக்கு விடையளியும், நான்வருகின்றேன். என்னை ஈன்றெடுத்ததாயே! உமது திருமேனியை இவ்வுலகத்தில் கடைசிமுறை நான் இப்பொழுது கண்டேன், இனி மறு உலகத்தில் என் கண்களால் காண்பேன்! (சௌமாலினி மூர்ச்சையாகின்றாள்.) ஈசனே எல்லாம் உம்முடைய கருணை.

**சேவகர்கள்.** வாருமையா! நேரமாய்விட்டது! (வெளியே அழைத்து வருகிறார்கள்.)

**சௌரி.** அடே! இப்பொழுதாவது சொல்கின்றாயா?

**பா.** சொல்கின்றேன். சிற்றப்பா! பயப்படாதே! என்கண்களால் உன் உருவை நீ நரகத்தில் கிடக்கும்பொழுது சீக்கிரம் காண்பேன், பயப்படாதே!

**சௌரி.** அடே! இவனை உடனே இழுத்துக்கொண்டு போய் காய்ச்சி இருக்கும் இருப்புச்சலாகைகளினால் இவனது கண்களைக் குத்திவிட்டு, பிறகு சீக்கிரம் இங்கே அழைத்து வாருங்கள்! அப்புறம் என்ன சொல்லுகின்றானோ பார்ப்போம்!

**பா.** ஈசனே எல்லாம் உனது கருணை! (சேவகர்கள் அழைத்துச் செல்கின்றனர்)

**சௌரி.** என்ன மனஉறுதி! இப்பொழுது பாடிக்கொண்டு போகின்றான்.

இரத்தம் தேகமெல்லாம் படிந்த ஒரு தூதன் ஓடிவருகிறான்.

அடே என்னடா இது?

**தூ.** மகாராஜா! உங்களுடைய உத்திரவின்படி காலசேன ராஜன் முதலியோருடைய சைனியங்களுடன் நமது சேனாதிபதி போர் புரிந்து அவர்களை முறியடித்து விட்டதினால் இருதிறத்திலும் அனேகர் மாண்டார்கள்.

**சௌரி.** என்ன! காலசேனனுடன் சித்திராயுதன் போர் புரிவதாவது!

**தூ.** அதுவுமன்றி யுத்தம் நடந்து கொண்டிருக்குஞ் சமயத்தில் நமது பாசறையில் யாரோ அனேகர் கள்வர் வந்து நமதாயுதங்களையெல்லாம் கொள்ளையடித்துச் சென்றிருக்கிறார்கள். இவ்விஷயத்தையெல்லாம் தங்களுக்குச் சீக்கிரம் கூறும்படி என்னைத் துரத்தினார்.

**சௌரி.** இதென்ன சமாச்சாரம்! சித்ராயுதனாவது நமது துணையரசர்களுடனே போர் புரிந்து அவர்களை முறியடிப்பதாவது! அடே! வா இப்படி! (அவனை அழைத்துக் கொண்டு விரைவிற் போகிறான்).

காட்சி முடிகிறது.

---

## ஐந்தாவது காட்சி

இடம்—அரண்மனையில் ஓர் அறை.

சௌரியகுமாரனும் பாலாயனனும் வருகிறார்கள்.

**சௌரி.** பார்த்தாயா பாலாயனா இந்நிருபத்தை? நான்தான், காலசேனன் முதலிய நமக்குதவியாயுள்ள அரசர்கள் நமக்கு விரோதிகளாய் விட்டார்களென்றும் அவர்களுடன் அந்தட்சணமே போர் புரிந்து அவர்கள் சைனியங்களை அடியோடழிக்க வேண்டுமென்றும், கட்டளையிட்டதாகக்கூறி அதற்கு அத்தாட்சியாக நமது இராஜ்ய முத்திரையிட்ட இந்நிருபத்தை சித்ராயுதன் அனுப்பியிருக்கின்றான். இந்நிருபத்தில் அவன் சொன்னபடியே

எழுதியிருக்கின்றது உண்மைதான்; எனது முத்திரையுமிருக்கின்றது. ஆயினும் எனது இராஜ்யத்தின்மீது ஆணைப்படிச்சொல்லுகின்றேன் நான் இம்முத்திரையையுமிடவில்லை இந்நிருபத்தையுமனுப்பவில்லை. பிதாவுக்குப் பிற்காலம் என்னையன்றி ஏமாங்கதன் ஒருவனுக்குத்தான் இம்முத்திரையிடும் சூட்சுமம் தெரியும். ஏமாங்கதன் இங்கெப்படி வந்திருக்கக்கூடும்? எனக்கொன்றும் தோன்றவில்லை.

**பா.** ஏமாங்கதனுவது இங்குவருவதாவது! நான் அனுப்பியிருக்கின்ற கொலையாளிகள் திரும்பிவரா விட்டாலும் இந்நேரம் அவர்கள் தங்களுடைய வேலையை முடித்து விட்டிருப்பார்கள் என்றே நினைக்கின்றேன்.

**சௌரி.** இல்லை! இல்லை! ஏமாங்கதன்தான் ஏதோ இதற்கெல்லாம் காரணமாயிருக்கின்ருன் என்று தோற்றுகின்றது. ஆயினும் அவனுக்கு இவ்வளவு யுக்திபோதாது. அவனுக்குதவியாக யாரோ இருந்துக்கொண்டு அவனை ஆட்டி வைக்கின்ருர்கள். நாம் இனிச்சித்தமாயிருக்க வேண்டும். இந்த ஒரு ஓலை எவ்வளவு வேலை செய்திருக்கின்றது பார்!

**பா.** ஆமாம் நமக்குத்துணையான அரசர்களுடைய சைனியங்களை யெல்லாம் நாமே அழித்து அவர்களை நமக்குப் பகையாக்கிக் கொண்டோம். இந்த யுத்தத்தில் நமது படைகளும் மிகவும் அழிந்தன. போதாக்குறைக்கு நமது பாசறையும் யாரோ கள்வர்களால் கொள்ளை யடிக்கப் பட்டதாம்!

**சௌரி.** இம்மட்டோ! நமக்குத்துணையாயிருக்கும் மற்ற அரசர்களும் நம்மைப்போன்ற மற்ருெருவனுக்கு வந்த கதிதானே நமக்கும் வருமென்று நம்மிடத்தில் இருக்கும் நம்பிக்கை குன்றுவார்களன்ருே! இதோ எனக்குப் பெண் கொடுக்கிறேனென்று சொல்லிக் கோண்டிருந்த பாஞ்சாலதேசத்தரசன் என்மீது கோபங்கொண்டு இனி உன்னுடன் ஒருசம்பந்தமும் செய்யமாட்டேன் என்று எழுதியிருக்கின்ருன்! இதற்கென்ன செய்வது?

**பா.** ஆயினும் நாம் அதைரியப்படவேண்டியதில்லையென்றே நினைக்கின்றேன். இன்னும்—

ஒருசேவகன் விரைந்து வருகிருன்.

**சே.** ராஜாதிராஜனே! நமது சேனதிபதி உமக்கு இந்நிருபத்தை அதிசீக்கிரத்தில் கொண்டுபோய்க் கொடுக்கக் கட்டளை யிட்டனுப்பினர் என்னை! (ஓர் ஓலைச்சுருளைக்

கொடுக்கின்றான்) அவர் இப்பொழுது பெருமலைதுர்க்கத்திலிருக்கின்றார்.

**சௌரி.** பாலாயனா! அப்பொழுதே உனக்குச் சொன்னேனே! நான் நினைத்தவண்ணமே இருக்கின்றது! ஏமாங்கதன் சிலகள்வர்களைத் தனக்குதவியாகக்கொண்டு படையெடுத்து குமாரபுரத்துக்கு வந்திருக்கின்றானாம். அவனுடைய மாமனாகிய சதானந்தனும் நம்முடைய கட்டளையெல்லாம் பராமுகம் பண்ணினவனாய் அஞ்சாது அவனுக்குதவியாகத் தன்சைனியத்துடன் அவனுடன் சேர்ந்துவிட்டானாம், நாளைத்தினம் சாயங்காலம் புறப்பட்டு புஷ்பபுரியை நோக்கிவரத் தீர்மானித்திருக்கின்றார்களாம்!

**பா.** ஐயனே! இது உண்மையாயிருக்குமா? நான் நம்பவில்லை.

**சௌரி.** சந்தேகமில்லை. இதோ சித்ராயுதனே எனக்கு எழுதியிருக்கின்றான்! பார்!

**பா.** மகாராஜா, இதற்கென்ன செய்வது! நம்முடைய சைனியங்களெல்லாம் இப்பொழுதுதான் முறியடிக்கப்பட்டு ஆயுதங்களெல்லாம் போய் நிலைதடுமாறியிருக்கின்றனவே!

**சௌரி.** இப்பொழுது தான் என்னுடைய புத்தி எனக்குதவவேண்டும்!— பாலாயனா! நாம் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்—நீ உடனே சென்று ஏமாங்கதன் குமாரபுரத்தினின்றும் புஷ்பபுரிக்கு வர ஒரு அடி எடுத்து வைத்தபோதிலும் இங்கு சிறையிலிருக்கும்படியான அவனுடைய மனைவியையும் மக்களையும் கொன்றுவிடும்படி நான் ஆக்ஞாபித்ததாக ஒரு நிருபம் எழுதி இந்தச் சேவகனிடம் கொடுத்து, நமது தூதனாக ஏமாங்கதனிடம் சீக்கிரம் கொண்டுபோய்க் கொடுக்கச் சொல் சீக்கிரம்! ஒரு நிமிஷத்தையும் போக்காதே! நான் என் சொற்படி நடக்கின்றேன் பார்! இந்நிருபத்தை எழுதிக்கொடுத்துவிட்டு சீக்கிரம் வா, போ,

**பா.** அப்படியே! இதோ (சேவகனை அழைத்துக்கொண்டு போகிறான்,)

**சௌரி.** ஆஹா! நான் மகுடம்பூண்ட வேளை நல்ல வேளை! இரண்டு மூன்று தினங்களுக்குள் என்னுடைய துணையரசர்களெல்லாம் தோல்வியடைந்து, என்னுடைய சேனையும் மிகவும் அழிந்து, ஏமாங்கதனும் படையெடுத்து வந்திருக்கின்றான்! அந்தமட்டும் சௌமாலினியையும் பாகுரியனையும் விட்டுவிடாது சிறையிலடைத்து வைத்தோமே! சரி, சீக்கிரத்தில் ஏமாங்கதனுவது

இறக்க வேண்டும் நானாவது இறக்கவேண்டும்! அதெல்லாம் இருக்கட்டும், இவ்வோலையில் நமது ராஜமுத்திரை எப்படி வந்திருக்கக்கூடும்? ஏமாங்கதன் இங்கு வந்திருக்க மாட்டான்! ஒரு வேளை நமது அரண்மனையில் அவனுக்கு உளவாக யாராவது இருக்கின்றார்களோ?

சுசங்கதை வருகிறாள்.

சுசங்கதா! என்ன சமாச்சாரம்?—என்ன உன் கண்களிரண்டும் சிவந்திருக்கின்றனவே! அழுது கொண்டிருந்தாயா என்ன?

சு. குலத்தையழிக்கக் கோடாலி நீ பிறந்தாயே! அழாமல் என்ன செய்வது நான்?

சௌரி. உம்! ஆரம்பித்தாயா? ஏமாங்கதனை வரவழைக்க வேண்டுமோ?

சு. அப்பா! உனக்கு நான் கடைசீ முறைக் கூறவந்தேன்; வேண்டாம், இனியாவது செம்மைப்படு. முற்றிலும் அழிந்து போகாதே! துன்மார்க்கத்தைவிட்டு சன்மார்க்கத்தை நாடு; இன்னும் உனக்குப் புத்திவரவில்லையா? பிறருக்குச் செய்த கெடுதிகளெல்லாம் உனக்கு என்ன நன்மையயைப் பயந்தன? உன் கெடுமதி உன்னையே அழிக்கின்றதேயொழிய வேறொன்றுமில்லை. ஏமாங்கதனை நாட்டைவிட்டுத் துறத்தினாய், அவனுடைய பெண்டு பிள்ளைகளைச் சிறையிலிட்டாய், பாலனாகிய பாலசூரியனுடைய கண்களையும் பறித்தாய், பிதாவைக் கொன்றாய், இவ்வளவும் செய்தாய், நீ அடைந்த பயனென்ன? மகாராஜாவாய் விட்டோம் என்று நினைக்கின்றாயோ? இந்தவாழ்வு இன்னும் எத்தனை நாள்? உன்னுடைய சைனியங்கள் முறியடிக்கப்பட்டன, உனது துணையரசர்களெல்லாம் உன்னைக் கைவிட்டார்கள், ஏமாங்கதன் தனது மாமனாருடைய உதவியைப் பெற்று படையெடுத்து வந்திருக்கின்றான். இனி என்ன பிரயோஜனம்? இன்னும் வீணிற் கெட்டுப் போகாதே. பேசாமல் நீ செய்ததெல்லாம் தவறென்று ஏற்றுக்கொண்டு ஏமாங்கதனிடம் போய்ச் சரணாகதியடைந்து உன்னை மன்னிக்கும்படிக் கேட்டுக்கொள். அவன் உத்தமபுருஷன் எப்படியும் உன்னை மன்னிப்பான்.

சௌரி. சுசங்கதா! என்ன சொன்னாய்! நானோ என் பகைவன் காலில் வீழ்ந்து என்னை மன்னிப்பாய் என்று கேட்பேன்! அதைவிட இதோ இந்தக் கற்றூணை உன் காலில் வணங்கச் சொல்.

**சு.** ஏமாங்கதன் உன் பகைவனல்லவே, சொந்த தமையன் தானே! நீ அவன் காலில் வீழ்ந்தாலென்ன?

**சௌரி.** அவன் என் தமையனு யிருப்பதினுற்ருன் என் பகைவனுனன்!—சுசங்கதா! மறுபடியும் இந்த வார்த்தையை என்னிடம் கூறவேண்டாம் போ!

**சு.** சரி! இனி உன்னுடன் பேசி பிரயோஜனமில்லை. கெடுமதி கண்ணுக்குத்தோன்றுமா? உன்தலைவிதிப்படி நடக்கின்றது. நானென்னசெய்வது! (போகிருள்)

**சௌரி.** இந்தசுசங்கதை ஏமாங்கதனுக்காக இவ்வளவு பாடுபடுவானேன்? அன்றைத்தினமும் இதையேகேட்டாள். ஆ! அன்றைத்தினம் இங்குவந்தபொழுது சுசங்கதை ராஜ முத்திரையின் அருகில் இருந்தாளல்லவா? ஓகோ அப்படித்தானிருக்க வேண்டும்! முன்பே நான் சந்தேகப்பட்டேன். சந்தேகமில்லை, இவள்தான் ஏமாங்கதனுக்கு உளவாக இருந்துகொண்டு அம்முத்திரையை அவ்வோலைகளில் பதிப்பித்து அனுப்பி யிருக்கவேண்டும். ஆஹா! நம்முடைய அடிவயிற்றிலேயே ஒரு பாம்பிருக்கின்றதா? சரி! இனி சுசங்கதை ஒரு க்ஷணம்உயிரோடு இருப்பாளாயின் இங்குநடக்கும் விஷயங்களெல்லாம் எதிரிகளுக் கெட்டிவிடும். இவளைச்சீக்கிரம் யமபுரம் அனுப்பவேண்டும். அடடா! இது முன்பே தெரியாமற்போயிற்றே!

பாலாயனன் வருகிருன்.

**பா.** மகாராஜா! நீர்சொன்னபடியே செய்துவிட்டு வந்தேன்.

**சௌரி.** சேவகன் நிருபத்தை எடுத்துக்கொண்டு சென்ருனு?

**பா.** முன்பே சென்ருன்.

**சௌரி.** பாலாயனு! இதனுடன் இக்காரியத்தை விடலாகாது நாம். இந்த சங்கடத்திற் கென்ன செய்யலாமென்று தோன்றுகிற துனக்கு?

**பா.** இதைக்குறித்துத் தம்முடன் முன்பே பேசவேண்டுமென்று நினைத்தேன். இப்பொழுதோ நாம் சித்திராயுதனிடம் இருக்கும் சைனியத்தை நம்பியிருக்கலாகாது. அவர்கள் அடிபட்டுச் சோர்ந்திருப்பது மன்றி ஆயுதங்களையும் பறிகொடுத்து பெருமலைதுர்க்கத்தில் அடைப்பட்டிருக்கின்ருர்கள். ஆகவே நமது எதிரிகளை அழிப்பதற்கு ஒருமார்க்கம் தோற்றுகின்றது; நேரில் அவர்களுடன் யுத்தம்செய்வதிற் பயனில்லை. இங்குள்ள சைனியங்களெல்லாம் ஒருங்குசேர்த்து இரவில் போய் அவர்கள் உறங்கும் பொழுது அவர்களை அழித்து விட்டு

வருவதே நலம் என்று தோற்றுகிறது, என்ன சொல்லு கின்றீர்?

**சௌரி.** பாலாயனா நல்லயுக்தி கூறினாய்! ஆம், ஒருவருக்கும் இதை வெளியிடாதே—நாம் இப்பொழுதே புறப்படு வோம்.

**பா.** ஐயனே. இதற்குத்தாம் வருவது நியாயமன்று, தமக் குக்காவலாக வேண்டியவர்களை இங்கு அரண்மனையில் வைத்துவிட்டு மற்றவர்களை நான் அழைத்துக்கொண்டு போய்இரவில் வேலை முடித்துவருகின்றேன்.

**சௌரி.** பாலாயனா! நல்ல யுக்திகூறினாய், அப்படியே செய் அப்பா! உன்னுடைய நற்குணத்தையும் யுக்தியையும் முன்பே அறியாமற் போனேனே! சீக்கிரம் சித்தஞ்செய். ஆயினும் நானும் வரவா?

**பா.** வேண்டாம், மகாராஜா யுத்தமுனையில் வரலாகாது. நான் போகின்றேன்.

**சௌரி.** பாலாயனா, நீ சென்று ஜெயம்பெற்று வருவாயாக!— உனது கையில் நோய் எப்படியிருக்கின்றது?

**பா.** அதொன்றுமில்லை. சீக்கிரம் போய்விடும். நான் விடை பெற்றுக்கொள்ளுகிறேன். என்னைக்குறித்து ஆச்சரிய மான செய்கைகளைச் சீக்கிரம் கேள்விப்படுவீர்.

**சௌரி.** சந்தேகமென்ன! (பாலாயனன் போகிறான்.) வரட்டும் வருகிறசங்கடங்களெல்லாம்! என்உயிருள்ளளவும் பார் த்து விடுகின்றேன்! (போகிறான்)

காட்சி முடிகிறது.

---

# மூன்றாவது அங்கம்

## முதற் காட்சி.

இடம்:- குமரபுரத்தில் ஏமாங்கதன் பாசறை.

இரவு. ஏமாங்கதனும் ஜெயபாலனும் உட்கார்ந்திருக்கின்றனர்.

**ஏ.** அப்பா, பாலாயனன் எழுதியிருக்கின்ற ஓலையைப்பார்த் தாயா?

**ஜெ.** பார்த்தேன்.

**ஏ.** இவ்வாறு நான் ஏதாவது படையெடுத்து வந்தால் பய முறுத்தும் பொருட்டே என் மனைவிமக்களை அவன் சிறையிலிட்டு வைத்தான் என்றெண்ணுகின்றேன். ஐயோ! சௌமாலினி சிறையில் பிரசவித்தாளாமே ஒரு

ஆண்குழந்தையை! அவளுக்கோ அக்கதி வாய்க்கத் தகுந்தது! பாலசூரியன் எப்படியிருக்கின்றானோ? நான் அரண்மனைக்குச்சென்ற பொழுதும் என்னால் இவர் களைப்பார்க்க முடியாமற் போயிற்றே! சௌரிய குமாரன் இவர்களைக்கொல்வானாயின் பிறகு என்கதி என்னவாவது?

ஜெ. ஆகவே, உமதெண்ணமென்ன?

ஏ. நாம் இங்கிருந்து சைனியங்களுடன் புஷ்பபுரியை நோக்கி ஓரடி எடுத்து வைத்தபோதிலும் என்மனைவிமக்களைக் கொல்வான் சந்தேகமில்லாமல் அச்சண்டாளன் சௌரிய குமாரன்! என்பிராணனிருக்குமளவும் அதற்கு நான் ஒருக் காலுமிசையேன். எனக்கு ராஜ்யமும் வேண் டாம் ஒன்றும் வேண்டாம். அவர்கள் சிறையிலிருந்த போதிலும் உயிரோடிருந்தாற் போதும். அப்பா, நாம் பழயபடி நமது காட்டிற்குப்போய் விடுவோம்.

ஜெ. அரசே, என்ன பயப்படுகின்றீர்! சௌரியகுமாரன் சும்மா பயமுறுத்துகின்றானேயொழிய வெறொன்று மில்லை. நாம் இவ்வளவுதூரம் வந்த பிறகு பின்வாங்கு வதா?

ஏ. அப்பா, அவனை நீ நன்றாயறிவாய். எனக்கு விஷம் கொடுத்துக் கொல்ல முயன்ற அவன் என்பெண்டு பிள்ளைகளைக் கொல்லப்பின்வாங்குவானா?

ஜெ. ஆனால் உம்முடைய கைக்குழந்தையைக்கொன்று உம் மையும் விஷம்கொடுத்துக் கொல்ல முயன்ற அத்து ரோகியை சும்மாகவா விடப்போகின்றீர்? உம்முடைய பெண்டுபிள்ளைகளையும் சிறையிலிட்டிருக்கின்றான்!

ஏ. ஆமாம், நான் என்ன செய்வது? அவன்தான் சுகமாய் நாடாளட்டுமே? எப்படியாவது என்பெண்சாதி பிள்ளை கள் இறவாமலிருந்தாற் போதும்

ஜெ. அரசே, அன்றைத்தினம் எப்படியாவது இவன் மீது பழிவாங்க வேண்டுமென்று கூறினீரே அது எப்படிப் போவது?

ஏ. சொன்னேன் உண்மையே, அப்பொழுது இப்படியெல் லாம் வருமென்று எண்ணினேனா?

ஜெ. ஐயனே! ஒரு காரியத்தை மேற்கொண்டால் தந்தை, தாயார், பெண்டு, பிள்ளை எதையும் பாரக்கலாகாது. அப்படி எதையும் எவரையும் பாராது ஒருவன் ஒரு காரியத்தை மேற்கொள்ளுவானாயின் அக்காரியத்தில் எப்படியும் சித்தி பெறுவான். இவைகளை யெல்லாம் கருதவாரம்பித்தல் காரியம் கைகூடுமா?

ஏ. அப்பா, அது உன்னால் முடியும் என்னால் முடியாது! முடியாது!—

அந்தர்டப்பு வயத்தான் முதலிய கள்வர்கள் ஆண்வேடம்பூண்ட சுசங்கதையைப் பிடித்து வருகிறார்கள்.

ஜெ. அடே யார் இது?

அ. சாமி! இவன் யாரோ தெரியலே, இங்கே வந்து ஒவ்வொரு கூடாரமா இருட்டிலே நுழைஞ்சி நுழைஞ்சி பாத்திக்கினு இருந்தான் நாங்கபோயி கபீல் இண்ணு புடிச்சிகினோம். புடிச்சிகினு யார்டா இண்ணு கேட்டா, சும்மா அழுரான், தலைவிதி இண்றான் எது கேட்டாலும் தலைவிதி இண்றான். எங்கேயிருந்து வந்தேடா இண்ணா தலைவிதி இண்றான்.

வ. என்னமாணா திண்ரத்துக்கு வச்சிகினு இருக்கிறையா இண்ணாக்கா, அதுக்குகூட தலைவிதி இண்றான் சாமி.

ஏ. யாரப்பா நீ? (சுசங்கதை ஏமாங்கதனைக்கண்டறிந்து கள்வர் கையினின்றும் திமிறிக்கொண்டு ஏமாங்கதன் காலில் வீழ்ந்து புலம்புகின்றாள்.)

சு. அண்ணா! அண்ணா! என்னை இவர்கள் கையினின்றும் காப்பாற்றும்! காப்பாற்றும்! (தலையிலணிந்த முடிவிழ, நிஜரூபம் வெளியாகின்றது)

ஏ. ஆ! சுசங்கதா! இங்கெப்படிவந்தாய்! இதென்ன கோலம்?

அ. அடடே! என்னடா ஒருபொம்மனாட்டியை புடிச்சிகினு வந்தோமே?

வ. போ! ஒதைதான் பொம்மனாட்டிங்களே நம்ப தொடக்கூடாது இண்ணு சாமி சொன்னாரே மறந்தூட்டையோ?

சு. அண்ணா, இவர்களைப்போகச்சொல்லும். அப்புறம் சொல்லுகின்றேன்.

ஏ. அடே! வெளியே செல்லுங்கள் (கள்வர்களெல்லோரும் வெளியே போகின்றார்கள். ஜெயபாலன் ஒருபுறமாய்ப் போய் நிற்கின்றான்.)

ஏ. சுசங்கதா! இக்கோலத்துடன் ஏது நீ இங்கே வந்தது? என்ன சமாச்சாரம்?

சு. அண்ணா, சௌரியகுமாரன் என்னைக்கொல்லப் பார்த்தான்; அப்பாதகனிருக்கு மிடத்தில் இனியிருப்பது தவறென்று கருதி இம்மாறுவேடம் பூண்டு தம்மைத் தேடிக்கொண்டு இங்குவந்தேன்! இவர்கள் கையிற்பட்டேன்,

ஏ. உன்னையா கொல்லப்பார்த்தான்? ஏன்?

சு. பிதா இறந்தபிறகு நான் உம்மை அழைத்துப் பட்டங் கட்ட வேண்டுமென்று அவனுடன் மன்றாடினேன். அப் பொழுது அவன் ஏதோ என்மீது சந்தேகங்கொண்டு என்னைக்கொல்லப் பிரயத்தனப் பட்டான்.

ஜெ. (ஒருபுறமாக) இதிற்பொய்யில்லை. முகத்திலேயே தெரிகின் றது.

ஏ. சுசங்கதா! சௌமாலினியும், பாலசூரியனும் எப்படி யிருக்கின்றார்கள்? குழந்தை என்னமாயிருக்கின்றது?

சு. அண்ணா! நான் என்ன சொல்லப்போகின்றேன்! என் நா எழவில்லையே! —(தேம்பி அழுகிறாள்.)

ஏ. என்ன! பாபி கொன்றுவிட்டானோ?

சு. (அழுதுகொண்டே) இல்லை, பாலசூரியனுடைய இரண்டு கண்களையும் பறித்துவிட்டான்.

ஏ. பாலசூரியனுடைய கண்களையா! ஏன்?

சு. ஆம்! ஏனோ எனக்குத்தெரியாது!

ஏ. கண்ணே! பாலசூரியா! பாலசூரியா! (தேம்பி அழுகிறான்; சுசங்கதை தேற்றுகின்றாள்; பிறகு சற்றுப்பொறுத்து எழுந்திருந்து ஜெயபாலனிடம் போகிறான்) அப்பா! என் தங்கை கூறிய தையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தாயா நீ?

ஜெ. ஆம் கேட்டேன்.

ஏ. (ஜெயபாலன் காலில்வீழ்கின்றான்)

ஜெ. ஐயனே! இதென்ன? எழுந்திரும்! எழுந்திரும்!

ஏ. அப்பா! நீ யாரென்று எனக்கு இன்னும் தெரியாது. ஆயினும் உன்னைப்போன்ற மதியுடையவர்கள் இவ்வுல கில் எவருமில்லை யென்று ஏதோ என்னை நினைக்கச்செய் கின்றது. அப்பா! இக்காலத்தில் எனக்கு நீ உதவவேண் டும்; எப்படியாவது நான் பாலசூரியனைப் பார்க்கும்படி செய்யவேண்டும்! அப்பா! இந்தவரம் எனக்கு அளி!

ஜெ. ஐயனே! இது எளிதானவிஷயமன்றே!

ஏ. அப்பா! சௌமாலினியும் பாலசூரியனும் இன்னும் சௌரியகுமாரன் வசத்தி லிருப்பார்களாயின் சீக்கிரம் அவர்களைக் கொன்றுவிடுவான். ஆதலால் எப்படியா வது அவர்களை அச்சிறையினின்றும் மீட்டுக் கொண்டு வந்து விடுவோமாயின் பிறகு நாம் தைரியமாகப் புஷ்ப புரியின் மீது படை யெடுத்துச் செல்லலாம், அப்பா, இதற்கொரு மார்க்கமுமில்லையா?

**ஜெ.** அப்படியே செய்யலாம். ஆனால் இது கஷ்டமான விஷயமாயிற்றே.

**ஏ.** பெரிதன்று, எப்படியாயினும் கஷ்டப்பட்டுப் பார்ப்போம்.

**ஜெ.** (ஒருபுறமாய்) வேறுவழியில்லை— அரசே, பயப்படாதீர் அப்படியேபார்ப்போம். அரண்மனையில் எந்தச் சிறைச் சாலையில் இருக்கின்றார்கள்?

**சு.** மேற்குபுறத்தில் மூலையிலிருக்கின்றதே அதில்.

**ஜெ.** சரி!—நாயனார்! கோஸ்கி!

நாயனாரும் கோஸ்கியும் வருகிறார்கள்.

**நா.** ஐயனே! தாம் விசாரிக்கச்சொன்னதை விசாரித்தேன். ஒரு கஷ்டமுமில்லை; புஷ்பபுரத்துக் கோட்டை மேலுக்கு மாத்திரம் மிகவும் காவலுடைய தாகத் தோற்றப் படுகின்றதே யொழிய வேறில்லை.

**ஜெ.** சந்தோஷம். இப்பொழுதே நீயும் இன்னும் ஏழுகள்வர்களுமாய்ப் புறப்பட்டு மாறு வேடம்பூண்டு புஷ்பபுரத்திற்குப்போய் மேற்குச்சிறைச்சாலையருகில் நாளைத்தினம் இரவு பனிரண்டு மணிக்குச் சித்தமாயிருக்க வேண்டும்; அச்சிறையினின்றும் மூவரைத் தப்புவிக்கவேண்டும்; அதற்குரிய சாமக்கிரியைகளை மறைத்து எடுத்துச் செல்ல வேண்டும்.

**நா.** அப்படியே, ஆனால் கும்பலாகப் போகவேண்டியிருக்கின்ற படியாலும் இந்தச்சாமான்களை யெல்லாம் எடுத்துச்செல்ல வேண்டியிருக்கின்ற படியாலும், முன்பு போலல்லாமல், வேறுவேஷம் பூண்டு போகிறோம்.

**கோ.** ஆமாம், நம்ப ஆயுதங்களே கொண்டுபோகத்தேவலே?

**ஜெ.** ஆம் கொண்டுபோகவேண்டும். என்ன செய்வததற்கு?

**கோ.** சாமி, நாங்கல்லாம் பாடகாள் வேஷம்போட்டுகினு போரோம். அது தான் சுலபம்.

**ஜெ.** அப்படியே செய்யுங்கள். கோஸ்கி உன்னிடம் ஒரு நிருபத்தைத் தருகின்றேன், அதை மேல் விலாசப்படி புஷ்பபுரியிற் கொண்டுபோய்க் கொடுத்துவிடவேணும்.

**கோ.** அப்படியே தாரேன்சாமி. சீக்கிரம் எழுதிதாங்க. சீக்கிரம் புறப்படணுமே!

**ஜெ.** இதோ வாருங்கள்; ஏமாங்கதராஜனே, வாரும் தம்முடைய தங்கையை அழைத்துக்கொண்டு. இனிநாம் ஒரு

க்ஷணமும் தாமதம் செய்யலாகாது. (எல்லோரையும் அழைத்துச் செல்கின்றான்.)

*காட்சி முடிகிறது.*

---

## இரண்டாவது காட்சி.

**இடம்.** *சிறைச்சாலை.*

*மேல்மாடியில் சௌமாலினி பாலசூரியனைக் கட்டியணைத்து அழுதுகொண்டிருக்கிறாள். சேவகர் கீழே காவல் செய்கின்றனர்.*

**சௌ.** *கண்ணே! எப்படியடா மனந்துணிந்து அப்பாதகர் களுன் இரண்டு கண்களையும் காய்ச்சிய இரும்புச்சலாகையினால் குத்தினார்கள்? உன் எளிய முகத்தைப்பார்த்தால் யமனுக்கும் இரக்கம் வந்திருக்குமே! இப்பாதகர்களுக்கேன் இரக்கமில்லாமற் போயிற்று? என் கண்மணியே! இப்பாவிகள் இரும்புச் சலாகையினால் உன் கண்களைக் குத்தியபொழுது உன்மனம் எப்படித் துடித்ததோ! நீ என்ன வருந்தினாயோ! கண்ணே! அதை நினைத்தாலும் என் நெஞ்சம் பகீர் என்கிறதடா! உன்கண்களை யவிக்க தெய்வத்திற்கும் கண்ணற்றுப் போயதோ! அடா மகனே! என் வயிறு பற்றி எரிகின்றதே! இது அச்சண்டாளப்பாவி சௌரிய குமாரனைச் சும்மாவிடுமென்று நினைக்கின்றாயோ? ஒருகாலும் விடாது! அவன் அடியோடு—*

**பா.** *அம்மா, அப்படி ஒன்றும் சொல்லாதீர். நமக்கு ஜன்மத் துரோகிகளாயிருந்த போதிலும் அவர்கள் நமக்கென்ன தீங்குகள் செய்தபோதிலும் நாம் அவர்களைப் பார்த்து இவ்வாறு கெட்டுப்போகின்றார்களே யென்று பரிதாபப் படவேண்டுமே யொழிய அவர்களைச் சபிக்கலாகாது. சுவாமியிருக்கிறார் எல்லோரையும் அவரவர்கள் துர்நடத்தைப்படி தண்டிக்க; நாம் ஏன் இவ்வேலையில் பிரவேசிக்க வேண்டும்?*

**சௌ.** *கண்ணே! இவ்விஷயம் உன் பிதாவுக்குத் தெரிந்தால் தன்பிராணனை விடுவாரேயடா! தன்கண்கள் போன போதிலும் அவ்வளவு வருத்தப் படமாட்டாரே!*

**பா.** *அம்மா, என்கண்கள் போனதற்காக நானே இப்பொழுது வருத்தப்பட வில்லையே, நீங்களேன் வருத்தப் படவேண்டும்? எல்லாம் ஈசன் செயலென்று பொறுத்திரும்.*

**சௌ.** ஆனால் உனக்குக் கண் குருடாயிற்றே என்று சிறிதும் வருத்தமில்லையா?

**பா.** முற்றிலும் இல்லை என்று கூறமுடியுமா? ஆயினும் இப்பொழுதெல்லாம் தணிந்துவிட்டது. இன்றைத்தினம் காலை உறக்கம் நீங்கி எழுந்திருக்க முயன்றபொழுது ஒரே இருட்டாயிருந்தமையால், என்ன நாம் இன்னும் தூங்குகின்றோமா என்று திடுக்கிட்டது என் மனதில்; உடனே நமது கண்கள் போனதினால் இனி நமக்குப் பகலும் நள்ளிருளும் ஒன்றுதான், என்று என் மனதில் தோற்றியவுடன், என்னால் அடக்கக் கூடாதபடி கண்ணீர் விட்டேன், அப்பொழுது சற்றுவியசனமாயிருந்தது இப்பொழுதெல்லாம் நீங்கிவிட்டது.

**சௌ.** கண்ணே! உன் மனோதிடத்தை நான் என்னென்றுரைப்பேன்! நீ பதினைந்துவயது அறியாப்பாலகனாயினும் உன் புத்தியை நான் என்னென்று புகழ்வேன்?

**பா.** அம்மா, என்னாலென்ன இருக்கின்றது! என் இருதய கமலத்தில் வீற்றிருக்கும் ஈசன் கருணையாகும் இது.

**சௌ.** கண்ணே! நீ வழிபடும்படியான அந்த ஈசன் உன்னை ஏன் இவ்வழிக்குக் கொண்டு வந்தார்!

**பா.** அம்மா, அதை நான் முன்பே கூறினேனே! அவருடைய திருவுள்ளத்தைக் குறித்து நாம் வினவலாகாது. நமக்கென்னதெரியும்? எல்லாம் நம்முடைய நலத்துக்காகவே அவர் நம்மை இவ்வாறு தண்டிக்கின்றார். பிள்ளையைத் தகப்பன் அதன் நன்மைக்காகவோ கெடுதிக்காகவோ தண்டிக்கின்றான்? இந்த க்ஷணத்தில் நமக்குத் துன்பமாகத் தோற்றுவது முடிவில் நம்முடைய நலத்திற்காகவே இருக்கலாம். என் கண்கள் போனது என் நன்மைக்காகவே யென்று முடிவில் விளங்கலாம். சுவாமியின் எண்ணத்தையறிய யாவராலாகும்?

**சௌ.** கண்ணே! எனக்கு வேறொன்றும் வருத்தமில்லை. இந்தச் சிறைச்சாலையில் படும் துன்பத்தினால் ஒருவேளை இறப்பேனாயின் நான், பிறகு அந்தகனாகிய உன் கதி என்னவாகும்? கண்ணே! உன்னைப்பற்றியே என் உயிரைக் கையிற்பிடித்துக் கொண்டிருக்கின்றேன், இல்லாவிட்டால் அப்பொழுதே உன்னை அந்தகனாகக் கண்டபொழுதே போயிருக்குமென்னுயிர்.

**பா.** அம்மா, எனக்காகத் தாம் வருந்தவேண்டாம். அம்மணி, சீக்கிரம் நமது துன்பங்களெல்லாம் நீங்கி ஈசனுடைய திருவடிபோய்ச் சேருவோம் என்று எனக்குத் தோற்று கின்றது.

**சௌ.** ஈசனே! அப்படியாவது எம்மை இத்துன்பத்தினின் றும் நீக்கி உம்மிடம் சேர்த்துக்கொள்ளும், சுவாமி! தாம் இன்னும் பராமுகமாயிருக்கலாகாது!

**சே.** (கிழே) அடே! நம்ப சேனைங்கள்ளா போச்சே என்ன சமாசாரம்? என்னமாறு தெரியுமா உனக்கு? ஒரு சமா சாரத்தையும் காணுமே! —அடே இது யாரடா இவங் கள்? யார் அது?

கள்வரெல்லோரும் மாறு வேடம் பூண்டு வருகிறார்கள்

**நா.** அப்பா! நாங்கள் பாடகாள்.

**சே.** என்ன? பாடகரா பாதகரா?

**நா.** எப்படி வேண்டுமென்றாலும் வைத்துக்கொள். பக்கத் தூருக்குப் போகிறோம். இன்றைக்கு இரவு இங்கே படுத் துறங்கிவிட்டுப் போகிறோம்.

**சே.** ஆறு, இது சிறைச்சாலையாச்சே! இங்கே படுத்துக்க லாமா? ஆனாலும் ஒரு பாட்டுபாடுங்க நண்ணு இருந்தா படுத்துக் கிறத்துக்கு இடம்தாரேன்.

**நா.** இதோ பாடுகிறோம். (கள்வரெல்லோரும் உட்கார்ந்து ஒரு பாட்டு பாடுகிறார்கள்)

**சே.** நண்ணு இருக்குது! பாவம் படுத்துக்குங்கோ! (கள்வரெல் லோரும் படுத்து சிறிது பொழுதுக்குள் நித்திரை செய்பவர்கள் போல் பாசாங்குசெய்கிறார்கள்.)

**சே.** என்னடா! இந்தபாடகருங்கோ மூக்காலே கூடப் பாட ராங்கோ! (திடீரென்று ஆராய்ச்சி மணி அரண்மனையில் அடிக் கின்றது). ஒரு ராணுவவீரன் விரைந்து வருகிறான்.

**ரா.** அடே! சேவகர்களே! பாலாயனர் எதிரிகளோடு சண்டை போடுவதை விட்டு அவர்கள் பட்சம் நம்முடைய சேனைக ளுடன் சேர்ந்துவிட்டாராம்! மகாராஜா இதைக்கேள்விப் பட்டு மிகவும் கோபங்கொண்டு இங்கு பட்டணத்திலிருக் கும் சேவகர்களை யெல்லாம் சேர்க்கச்சொன்னார். வாருங் கள் சீக்கிரம்! (சேவகர்களை அழைத்துக் கொண்டு விரைவிற் போகிறான். சற்று நேரம் பொறுத்து, சிறைச்சாலை எதிரிலுள்ள, ஒரு சுரங்கத்தின் வழியாக மூடியை மெல்லப் பெயர்த்துக்கொண்டு ஜெய பாலனும் ஏமாங்கதனும் வருகிறார்கள். ஜெயபாலன் மூன்று முறை கையை நொடிக்க கள்வரெல்லோரும் மெள்ளஎழுந்திருக்கின்றார்கள்.)

**ஜெ.** (மெல்லியகுரலாய்) அடே, எங்கே அந்த உடும்பு கட்டின கயிறு? (ஒருகள்வன் அதைக்கொடுக்கின்றான். ஜெயபாலன் அதை வீசி எறிகின்றான் சிறைச்சாலையின்மீது)
அடே, ஏறுசப்தம்செய்யாதே! (ஒருகள்வன் ஏறிப்போய் நூலேணி ஒன்றைக்கட்டி அவ்விடமிருந்து கீழேவிடுகின்றான்.)
அரசே, சீக்கிரம்போய் முதலில் உம்முடைய மனைவியை அழைத்துவாரும்; ஜாக்கிரதை சீக்கிரம், சப்தமே கூடாது.

(ஏமாங்கதன் நூலேணிபற்றி ஏறிச் செல்கின்றான்.)

**சௌ.** (மேலிருந்து) பிராணநாதா! பிராணநாதா!—

**ஜெ.** சீக்கிரம்! சீக்கிரம்! சப்தம்வேண்டாம். (ஏமாங்கதன் சௌமாலினியை அழைத்து வருகிறான் நூலேணி வழியாக.)

**ஜெ.** அரசே, எவ்வளவுநேரம்? காலமாய்விட்டதே! நீர் உம்முடைய மனைவியை அழைத்துக்கொண்டு சுரங்கத்தின் வழியாக முன்புபோம். நான் போய் பாலசூரியனை அழைத்து வருகின்றேன்.

**சௌ.** பிராணநாதா! பாலசூரியனையும் அழைத்துவாரும். அவனைவிட்டுவிட்டு நான் மாத்திரம் எப்படிப் போவேன்? அவன் அந்தகனாயிற்றே!

**ஜெ.** அரசே! நீர்போம், சீக்கிரம் நானழைத்து வருகின்றேன்! நேரமாய்விட்டது, யாராவது பார்த்துவிட்டால் பிறகு அபாயம்!—

**சௌ.** அவன் வந்தாலொழிய நான்போகமாட்டேன். அவனை விட்டுப் போக எனக்கெப்படி மனம் துணியும் ஐயா?

**ஜெ.** ஐயனே பெண்புத்தியை கேளாதீர் போம்! இறங்கும்! அதோ! (தாரையின் சப்தம் கேட்கின்றது) யாரோவருகிறார்கள்! இறங்கும் சீக்கிரம்! இறங்கும்! (ஏமாங்கதன் சுரங்கத்தின் வாயிலில் குதிக்கிறான். சௌமாலினி தன்கைக் குழந்தையை மார்போடணைத்துக்கொண்டு சுரங்கத்தில் இறங்கப்போகும்சமயத்தில், எதிர் மதில் சுவரினின்றும் ஓர் சேவகன் அம்பை எய்ய அவ்வம்பு குழந்தையை ஊடுருவிச் சௌமாலினியின் மார்பைத்துளைக்கின்றது. சௌமாலினி பிராணநாதா! என்று கூச்சலிட்டுக்கொண்டு ஏமாங்கதன் கரத்தில் வீழ்கின்றாள்.)

**ஜெ.** அடே! மண்ணைமூடிவிடுங்கள் இதன் பேரில்! நில்லாதீர்! தப்பித்துக்கொள்ளுங்கள்! (சுரங்கத்தில் குதித்து மூடிக்கொள்ளுகின்றான். கள்வர்கள் அதன்மேல் மண்ணை மூடிவிட்டு நான்குபுறமாய் ஓடிவிடுகின்றார்கள். அரண்மனையில் ஆராய்ச்சி மணி அடிக்கின்றது.)

சௌரியகுமாரன் சில சேவகர்களுடன் விரைந்தோடி வருகின்றான்.

**சௌரி.** அப்பொழுதே நினைத்தேன்! நினைத்தேன்! தப்பிப் போய் விட்டார்கள் போலிருக்கின்றது! அடே! அங்கிருக்கும்படியான சேவகர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு நான்குபுறமும் தேடச்சொல். எப்படியாவது கண்டுபிடித்துக்கொண்டு வரவேண்டும், இல்லாவிட்டால் நீங்களெல்லாம் இறக்கவேண்டியதுதான்! (சிலசேவகர் போகிறார்கள்) சரி! இந்த ஏணியின் வழியாக இறங்கிச் சென்றிருக்கவேண்டும்! (ஏணியின்மீது ஏறிப்போகின்றான்.)

**பா.** (மேலிருந்து) அப்பா! அப்பா!—

**சௌரி.** என்ன? அப்பா என்கிறான் பாலசூரியன்!—போன அவசரத்தில் இவனை இங்குவிட்டுவிட்டுப்போனாற் போலிருக்கின்றது? இன்னும் என்ன சொல்லுகிறான் கேட்போம்!

**பா.** அப்பா! இத்தனை நேரம் பிடித்ததா தாயாரை அழைத்துக் கொண்டு போய் விட்டுத்திரும்ப? அப்பா, என்ன சப்தம் கேட்டதே?

**சௌரி.** ஓகோ! ஏமாங்கதனே வந்து அழைத்துக்கொண்டு போய்விட்டாற்போலிருக்கின்றது; (இறங்குகின்றான்)—சரி இனியென்ன இருக்கின்றது; நாம் செய்யவேண்டியது வேறொன்றுமில்லை. அடே சேவகா! மேலே சென்று, பாலசூரிய னிருக்கின்றான் அங்கு, அவனுடைய பிதாவிடம் அழைத்துக்கொண்டு போவதாகக்கூறி, இறக்கி அழைத்துக்கொண்டுபோய் இப்பொழுதே கொன்று அவனுடலை என் அறைக்குக் கொண்டு வாருங்கள்! சீக்கிரம்!—தீர்ந்தது நம்முடைய வேலை! இனியென்ன இருக்கின்றது! (போகின்றான்)

ஒரு சேவகன்போய் பாலசூரியனை கீழே அழைத்துவருகிறான்.

**பா.** அப்பா? எங்கே என் அப்பா?

**சே.** அழைத்துக்கொண்டு போகின்றேன் வாரும்.

**பா.** அப்பா?—ஐயோ! அப்பா இருந்தால் ஏன் என்றிருப்பாரே! எனக்கு பயமாயிருக்கின்றது. நீங்கள் என்னை எங்கேயோ அழைத்துக்கொண்டு போகின்றீர்கள்! ஐயோ நான் அந்தகனுனதைப்பற்றி இப்பொழுது தான் எனக்கு வருத்தமாயிருக்கின்றது, ஒன்றும் தோன்றவில்லையே! இப்பாபிகள் எனக்கேதோ தீங்குசெய்யவே அழைத்துக்

கொண்டு போகின்றார்கள். ஈசனே எல்லாம் உனது திருவருள். (சேவகர்களெல்லாம் பாலசூரியனை அழைத்துக்கொண்டு போகிறார்கள்.)

*காட்சி முடிகிறது*

---

## மூன்றாங் காட்சி.

**இடம்:** குமாரபுரம். ஏமாங்கதன் பாசறை. சௌமாலினி படுக்கையின்மீது மரணவஸ்தையிலிருக்கின்றாள் கால்மாட்டில் சுசங்கதை இறந்த கைக்குழந்தையை வைத்துக்கொண்டழுதுகொண்டிருக்கின்றாள். ஏமாங்கதன் தலையருகில் உட்கார்ந்திருக்கிறான். ஜெயபாலன் ஒருபுறமாய் நிற்கின்றான். நாயனார், வயத்தான், முதலிய கள்வர் வாயில் காத்து நிற்கின்றனர்.

**சௌ.** கண்ணே! பாலசூரியா? எங்கேபாலசூரியன்? ஏன் வரவில்லை முன்பே வருவான், என்று சொன்னீரே?

**சு.** அம்மா, சற்றுப்பொறும் வருவான், இதோ வந்து விடுவான்.

**சௌ.** ஏன் பொய்பேசுகின்றீர் அவன் வரவேமாட்டான் எனக்குத் தெரியும்! ஜெயபாலன் ஏமாங்கதனை மெல்ல சைகை செய்தழைக்கிறான்]

**ஜெ.** [ஒரு புறமாய் ஏமாங்கதனுக்கு] ஐயனே! வருத்தப்படாதீர்! இனி பிரயோஜனமில்லை! என்னாலியன்றவளவு பிரயத்தினப்பட்டு பார்த்தேன் மிஞ்சிவிட்டது! சீக்கிரம் உயிர் போகும் நேரமாய் விட்டது!

**சு.** அண்ணா! வாரும் இப்படி சீக்கிரம் வாரும்!

**சௌ.** பிராணநாதா! பிராணநாதா! [ஏமாங்கதன் சௌமாலினியிடம் போகிறான்] என்ன நம்முடைய அரண்மனையில் சந்தடியற்றிருக்கின்றதே—பிராணநாதா! அந்தமட்டும் நாம் அனுபவித்த துன்பங்களெல்லாம் போய் இப்பொழுதாவது சுகமடைந்தோமே! பிராணநாதா! பாலசூரியனுக்கு விவாகஞ்செய்ய வேண்டிய காலமாய் விட்டது!—அவனுக்கு மகததேசத்து அரசன் பெண்ணை விவாகஞ்செய்வித்து, சீக்கிரம் பட்டம் கட்டி நாம் பார்க்கவேண்டாமா!—இதோ! பாலசூரியன்!—இதோ! பாலசூரியன்!—பாலசூரியா என் சொற்படி நட! சீக்கிரம் விவாகஞ் செய்து கொண்டு இந்நாட்டையாள்!—என் கைக்குழந்தை இறந்தது என்று யார் சொன்னது! இதோ பாலசூரியன் கையில் அது சிரித்துக் கொண்டிருக்கின்றதே! பாலசூரியா! இப்படி கொடு அதை!—இந்த ஆற்றைக் கடந்தா நான் வரவேண்டும்?—நான் பயப்படவில்லை இதோ வருகின்றேன் பிராணநாதா! நீரும்

வாரும் சீக்கிரம் நான் முன்பு போகின்றேன் !—பால சூரியா ! இதோ வந்து விட்டேன் !—அப்படித்தான் வழிகாட்டு !—கண்ணே !—[சௌமாலினி இறக்கின்றாள். எல்லோரும் கண்ணீர்விட்டுத் தேம்பி அழுகின்றார்கள்]

சு. [சிறிது பொறுத்து] கண்ணே ! நீ உன் அன்னையுடன் உறங்கு. [இறந்த கைக்குழந்தையை முத்தமிட்டு சௌமாலினியின் பிரேதத்தருகில் வைக்கின்றாள்]

ஜெ. சௌரியகுமாரா ! இது உன் செயலன்றோ !

ஏ. [சரேலென்று எழுந்திருந்து] அப்பா ! நன்றாக ஞாபகப் படுத்தினாய் ! இதோ நானொருசபதம் செய்கின்றேன் ! என்னுடைய பெண்டு பிள்ளைகளை இக்கதிக்குக் கொண்டுவந்த சௌரியகுமாரனை நான் சீக்கிரம் பிணமாய்க்காணவிட்டால் நான் ஒரு க்ஷத்திரியனல்ல ! [சௌமாலினியின் பிரேதத்தை முத்தமிட்டு] கண்ணே சௌமாலினி ! இந்த சபதத்தை நிறைவேற்றி நீ சொன்ன வண்ணம் நானும் சீக்கிரம் உன்னிடம் வந்து சேர்கிறேன் பயப்படாதே !

நா. ஐயனே ! இந்தக்ஷணம் எங்களுக்கு விடைகொடும் அக் கொடும் பாபியைக்கொன்று விட்டு வருகின்றோம். எங்களுடைய வீரத்தைப்பாரும் ! இப்படிப்பட்ட கொடும் பாபி இவ்வுலகத்தில் ஒருக்ஷணமும் இருக்கலாகாது இனி ! ஐயோ இதையெல்லாம் நாங்கள் முன்பே அறியாமற் போனோமே !

வ. அந்த பாவியே சீக்கிரம் கொல்லாப்போனா நாங்கல்லாம் திருடரல்லசாமி ! எங்க ஒடம்புலே ஒரு துளிரெத்தம் இருக்கிறவரைக்கும் அவனே சும்மா விடரமா சாமி ! அவன் ஆம்பளையா ! பொம்மனாட்டிங்களெயெல்லாம் கொல்ரவேன்சாமி !

ஜெ. ஐயனே, இனிநாம் காலதாமசம் செய்யலாகாது சீக்கிரம் புஷ்பபுரிக்குப் புறப்படவேண்டும். பிரேதங்களைத்தக்க படி அடக்கம் செய்ய ஏற்பாடுசெய்யும்.

ஏ. ஆமாம்! நான்குபெயர் நான்கு மூலையில் பிடித்து இக் கட்டிலை அப்படியே எடுத்து வாருங்கள் சுசங்கதா! அம்மா! அழாதே ! இனி என்ன இருக்கின்றது !—[பிரேதங்களையெடுத்துக்கொண்டு ஜெயபாலன் தவிர மற்றெல்லோரும் போகிறார்கள்]

ஜெ. இக்காட்சி என்மனதையும் கலக்கிக் கண்ணீர்விடச் செய்தது ! ஐயோ ! இவைகளுக்கெல்லாம் ஆதிகாரணம் நானன்றோ? சிறுவயதில் என்னுடைய நிகரற்றபுத்தியை

சத்விஷயங்கள் கற்பதில் உபயோகித்திருப்பேனாயின் இத்தீமைகளொன்றும் நேர்ந்திராவே! இத்தனை உயிர்களும் தப்பியிருக்குமே! இக்கோரவிஷயங்களின் தத்வத்தைக் கண்டறிவதில் என்புத்தியைச் செலுத்தியதினாலல்லவோ நானும் இக்கதிக்குவந்தேன்! இத்தனை பெயர் இறக்கவும் வழிதேடினேன். ஒரு குற்றம் எத்தனை குற்றங்களுக்குக் கர்த்தாவாயிருக்கின்றது! என்குருவின் வார்த்தைப்படி இதை அன்றுடன் விட்டிருப் பேனாயின்!— ஐயோ! நான் சிறுவயதில் எண்ணியபடி என்கோரிக்கைகளெல்லாம் கைகூடி என்காதலியாகிய காந்திமதியை மணந்து, நிகரற்ற பதவியிலிருந்திருப்பேனே இப்பொழுது! காந்திமதி! காந்திமதி! உன்மீது வீணில் சந்தேகம்கொண்டு உன்மனதைப் புண்ணாக்கிக் கொன்றவனும் நானே! நானே!—சீ! இப்படிப்பட்ட பாதகன் ஜன்மமினியிருக்கலாகாதிவ்வுலகில்!— இவைகளையெல்லாம் பற்றி இப்பொழுது யோசித்துப் பயனென்ன? அப்பொழுதிருக்கவேண்டும் அந்த புத்தி!— உம்! வந்தவழியாகின்றது!— இனிமேல் நடக்கவேண்டிய விஷயத்தைப் பற்றி யோசிக்கவேண்டும்—அடே! கோஸ்கி!

**கோஸ்கி வருகிறான்**

**ஜெ.** பாலாயனர் எங்கே? நான் அழைப்பதாக அழை.

**கோ.** சாமி, அவரைப்பற்றிதான் சொல்ல வந்துகினுஇருந்தேன் இங்கே ராணி அம்மாசெத்துபூட்டாங்க இண்ணு சொல்லப்போனேன், அவர் கூடாரத்திலே செத்து கிடந்தாரு, தூங்கரராராங் காட்டியும் இண்ணு எழுப்பிப் பார்த்தோம் மின்னே! அப்புரம் செத்து பூட்டாரு இண்ணு தெரிஞ்சுது!

**ஜெ.** ஓகோ! இன்றைக்கல்லவா முப்பதாம் நாள்! சீ அதை மறந்தேன் நான். சரி அவன் வேலையும் தீர்ந்ததா? நான்காவதாயிற்று. ஆனால் நமக்கு இன்னும் ஒருநாள் தான் இருக்கின்றது! ஓகோ! சீக்கிரம் நமது பிரதிக்ஞையை முடிக்கும் விதத்தைத் தேடவேண்டும்!

**ஏமாங்கதன்** *நிருபமொன்றைக் கையிற் கொண்டு வருகிறான்.*

**ஏ.** அப்பா! இன்றைத்தினம் இரவுதகனம் செய்ய ஏற்பாடு செய்திருக்கின்றேன்—அப்பா! இந்நிருபத்தைப் பார்த்தாயா? இப்பொழுதுதான் சௌரியகுமாரனுக்குப் புத்திவந்தது! இந்தபுத்தி முன்பே தோன்றியிருக்கலாகாதா? தான் எனக்குச்செய்த தெல்லாம் தவு

றென்றும், தம்பி என்பதைப்பற்றி அவைகளையெல்லாம் நான் மன்னிக்கவேண்டு மென்றுத்தான் வேண்டிக் கொள்ளுவதாகவும், இதற்கெல்லாம் பிரயாச்சித்தமாக பாலசூரியனை சிறையினின்றும் விடுவித்துத் தன்னுடைய பட்டத்தை அவனுக்குக் கட்டி விட்டதாகவும் தான் இனி தேசாந்திரியாகப் போவதாகவும் எழுதியிருக்கின்றான். கூடிய சீக்கிரத்தில் என்னையும் பட்டணத்திற்கு வந்து பாலசூரியனைக் கண்டு மகிழும்படி வேண்டியிருக்கின்றான்!—

ஜெ. ஐயனே! இதென்ன இது!—

ஏ. முன்பே நினைத்தேன். அவன் எழுதியிருக்கின்ற வண்ணம் யரோ சேவகன் சௌமாலினியையும் என் கைக் குழந்தையையும் கொன்றிருக்கவேண்டுமேயொழிய அவன் அவ்வாறு உத்திரவு செய்திருக்கமாட்டான்.

ஜெ. ஆனால் இதெல்லாம் உண்மையென நம்புகின்றீரா என்ன ?

ஏ. இதிலென்ன பொய்யிருக்கப்போகின்றது ?

ஜெ. ஆனால் இப்பொழுதென்ன செய்யவேண்டுமென்கிறீர் ?

ஏ. சௌரியகுமாரன் கேட்டுக்கொள்ளுகின்றபடி சீக்கிரம் புஷ்பபுரிக்குச் செல்லுவோம்— சீ! என்னுடைய தம்பி தம்பிதான்! அவனிடம் கொஞ்சமாவது நன்மை யிராமற்போகாதென்று எண்ணினேன்; அப்படியே யிருக்கின்றது!

ஜெ. அரசே, நான் சொல்வதைக்கேளும்; இதெல்லாம் பொய். இதுவும் நம்மைக் கெடுப்பதற்காக ஒரு சூழ்ச்சியேயொழிய வேறன்று; இதை நம்பாதீர்; சௌரிய குமாரன் என்னவோ.

ஏ. அப்பா! இனி அவனைப்பற்றி ஒன்றும் விரோதமாகக் கூறாதே! அவன் என்னை மன்னிக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்ளும் பொழுது அப்புறம் அவன் மீது துவேஷம் வைக்கலாமா நான் ?

ஜெ. ஐயனே வேண்டாம் இப்பொழுது சொன்னேன், இதை யொன்றும் நம்பாதீர்! அவனை எங்கு கண்டீர் நீர்!

ஏ. உனக்கொன்றும் தெரியாதப்பா அவனைப்பற்றி!

ஜெ. இருக்கட்டும்—ஆனால் சற்றுமுன்பாக உம்முடைய மனைவியின் பிரேதத்தினருகில் நின்று சபதம் செய்தீரே க்ஷத்திரியனாக விருந்து அது எப்படிப்போவது ?

இரிச்சன் ஓடிவருகிறான்.

இ. சாமி! சுசங்கதா தேவி திடீர் இண்ணரி எங்களை யெல்லாம் மீறிகினுபோயி அந்தமலைச் செங்குத்துலேயிருந்து விழுந்து செத்துப் பூட்டாங்க! நாங்க தடுக்கரத்துக்குள்ள விழுந்து செத்து பூட்டாங்க! நாங்க என்னா செய்யரது சாமி!

ஏ. ஆ! அப்படியா? எங்கே? எங்கே? (வெளியே ஓடுகிறான் இரிச்சனை இழுத்துக்கொண்டு.)

ஜெ. சீ! இதென்ன இது! ஒன்றின்மேல் ஒன்றாய் வந்து கொண்டிருக்கின்றது! பலாயனன்மீது சுசங்கதை காதல் கொண்டிருந்தாள் எனமுன்பே சந்தேகித்தேன். அவன் இறந்ததைக் கேட்கவே தானும் இறக்கத் துணிந்திருக்க வேண்டும். அதிருக்கட்டும் இந்தச்சங்கடத்தில் என் கதியை முற்றிலும் மறந்தேன்! இனிநான் காலதாமதம் செய்யமுடியாது. ஏமாங்கதன் மறுபடியும் திரும்புவான் போலிருக்கின்றது! இவனுடன் இனி பேசுவதிற் பயனில்லை. அவன் நம்மை சௌரியகுமாரனைக் கொல்ல விடான். பிறகு நம்முடைய பிரதிக்ஞை நானா தவறினால் என்னவாவது! இனிநான் நேராகப் போய்ப் பார்க்க வேண்டியது தான்! ஏமாங்கதனால் இனி நமக்கு பிரயோஜனமில்லை. வருவதுவரட்டும், கடைசி முறை துணிய வேண்டியதுதான்! ஈசன் என்றொருவன் இருப்பானாயின் என்னை மன்னிப்பானாக! (போகிறான்)

காட்சி முடிகிறது.

## நான்காவது காட்சி.

இடம். புஷ்பபுரியின் எல்லை. கொலைக்களத்துக்குப் போகும்வழி.
பாலசூரியனை இரண்டு சேவகர்கள் கைப்பிடித்து
அழைத்துவருகிறார்கள்.

பா. அப்பா, என்னைச் சற்று மெள்ள அழைத்துச் செல்லுங்கள், காலில் அதிகமாய்க்காயம் படுகின்றது! ஒன்றுந் தெரியவில்லை.

சே. உனக்கென்ன இருட்டா! குருடனுக்கு இருட்டும் வெளிச்சமும் எல்லாம் ஒன்றுதானே! சீக்கிரம் சாகப்போகின்றவனுக்கு காலில் காயம்பட்டால் கெட்டுப்போகின்றதா? வா சீக்கிரம்.

பா. ஆ! ஈசனே! ஈசனே! அப்பொழுதே நினைத்தேன்! இனி என்ன இருக்கின்றது? தந்தையும் போய் தாயும் போய்

கண்ணும்போய் நான் இனி இவ்வுலகத்தில் இருந்தென்ன பயன்! ஈசனே! இனி நான் உமது திருவடிகளிற் சேர வேண்டியதே! சுவாமி! தம்முடைய திருவுள்ளம் இப்படி இருந்ததோ? என்னை அனாதையுமாக்கிக் குபோதியுமாக்கியதும் போதாதென்று இவ்வாறு இறக்கவும் திருவுளத்திலெண்ணினீரோ? தமது சித்தத்திற்கு மாறுஉளதோ? நான் என்ன சொல்லப் போகின்றேன்? இது உமக்குச் சரியானதாயின் எனக்கும் சந்தோஷமே—ஆயினும்! நான் இவ்வாறு தண்டிக்கப் படுவதற்கு என்ன குற்றஞ் செய்தேன்? தமது திருவுள்ள மறியநான் பிறந்தது முதல் ஒரு குற்றமும் செய்யவில்லை முன்சென்மத்திற் செய்த தீவினையின் பயனோ இப்பொழுது வந்து மூண்டது? ஆயினும் நாயேனுக்குத்தாம் மனமிரங்கி யிருக்கலாகாதா? என்னை ராஜகுமாரனாகப் பிறப்பித்து, நல்ல ஸ்திதியில் வைத்து, பிறகு திடீரென்று தந்தையை யிழக்கும்படிச் செய்ததுமன்றி, சிறைச்சாலையிலிட்டுப் பின் தாயையுமிழக்கச் செய்து, இரண்டு கண்களும் போக, அனாதையுமாக்கியதுமன்றி முடிவில் என்னை இப்பாதகர்கள் தூக்கிவிடவும் விதித்தீர்! என் மனஉறுதியைப் பரிசோதித்தற்பொருட்டோ? சுவாமி! இனி இன்னும்என்ன செய்யப்போகின்றீர்? ஐயனே! தமது திருவுள்ளத்தின் முன் நாயேன் எவ்வளவு? உலகப்பற்றை ஏன் சிறிது வைத்திருக்கின்றாய், அதையும் விட்டு விடென்று என்னை இக்கோலங்காட்டினீரோ? ஐயனே, என் தாய் என்கின்ற அந்தப்பற்றையும் விட்டேன். இனிஎன்னை நீர் ஆட்கொள்ளேனென்றால் விடுவேனா? ஐயனே! நான் தளர்ந்தேன், என்னை இனித் தாங்குவது உம்முடைய கடமை. இனி எனக்கு இம்மானிடப் பிறவி வராவண்ணம் என்னைக்காப்பாற்றும்! ஈசனே! உமது திருவடியைச் சிக்கெனப்பிடித்தேன். இனி என்னைக்கைவிட உம்மால் முடியாது. ஈசனே! ஜகதீசா! எல்லாமும தருள்!—

**சே.** வா! வா! சீக்கிரம் நேரமாய்விட்டது. (அழைத்துப்போகின்றனர்);

(பாலசூரியன் தோத்திரப் பாடல்கள் பாடிக்கொண்டே போகிறான்.)

காட்சி முடிகிறது.

## ஐந்தாவது காட்சி

இடம்.— புஷ்பபுரி அரண்மனையில் சௌரியகுமாரனுடைய அறை.
பாலசூரியனுடைய பிரேதம் ஒருபுறமாய் சிம்மாசனத்தில்
உட்கார்ந்திருப்பது போல் வைத்திருக்கின்றது;
சௌரியகுமாரன் அதனருகில் நிற்கிறான்.

**சௌரி.** —மற்றவைகளையெல்லாம் அணிந்து கொண்ட நீ இதையும் அணிந்துகொள்! [தன் கிரீடத்தை எடுத்து அதற் கணிகின்றான்] ஆம்! இப்பொழுது உன் தகப்பனுக்கு எழுதிய வண்ணம் உனக்கு முடிசூட்டிவிட்டேன்! இனி உன் தந்தை மனம்களிக்க உனக்கிஷ்ட மிருக்கு மளவும் இந்நாட்டை ஆண்டு கொண்டிரு!— இன்னும் நான் செய்யவேண்டியவேலை என்ன இருக் கின்றது?—ஒன்றுதான்! [ஒருபுறமாயிருக்கும் மேஜையரு கிற்சென்று அதைத்திறந்து விஷம் வைத்திருக்கும் ஒரு குப்பியை எடுக்கிறான்]—ஆ! கடைசிமுறைப் பிதாவுக்காக இதை எடுத்த பொழுது, பிறகு எனக்கே இதை உபயோகப் படுத்த வேண்டிவருமென்று நான்கனவிலும் நினைக்க வில்லை! சீ! நான் இந்தக்கதிக்கு என்னமாகவந்தேன்? எனக்கென்ன தைரிய மில்லாமற்போயிற்றா? ஊக்கத்தில் குன்றினேனா? மனஉறுதி குறைந்ததா? ஒன்றுமில்லையே —சீ! நான் எவ்வளவு மறக்க முயன்றாலும் இந்த பாலசூரியன் தன்வினை தன்னைச்சுடுமென்று கூறியது ஞாபகத்திற்கு வந்துகொண்டே இருக்கின்றது. அதெல் லாமொன்று மில்லை. அண்ணனையிற்றேயென்று முதலில் சற்றுயோசித்தேன், அதில் கெட்டது எல்லாம்!—இனி யோசித்துப் பயனென்ன! ஜெயபாலன் நமக்குக் கொடுத்திருக்கிற மருந்து தான் இருக்கின்றதே இவ்வள வையும் ஓரேவிசையிற் குடித்து விடுவேனாயின் நான் க்ஷணநேரத்தில் இறப்பேன்! ஆஹா! நான் என் கையாலேயே இறக்கவேண்டும்!—

ஜெயபாலன் திடீரென்று அறைக்குட் பிரவேசித்து, சௌரிய குமாரன் கையிற் பிடித்திருக்கும் விஷக்குப்பியை உடைத்து விட்டு அவனிரு கரத்தையும் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்ளுகின்றான்;

**ஜெ.** இல்லை! இல்லை! என்கையால் இறக்கவேண்டும்! (கீழே வீழ்த்தி மார்பின்மீது காலைவைத்துக் கொண்டு ஆ! சௌரிய குமாரா! நான் இரண்டு வருடங்களுக்குமுன் செய்த சபதத்தை இப்பொழுது தான் நிறைவேற்றுகின்றேன் (கட்டாரியால் குத்துகின்றான்) அடா! நேசத்துரோகி! நான்

வேடிக்கைக்காகக் கொடுத்த விஷத்தைக் கொண்டு எத்தனைபெயரைக் கொன்றாய் நீ! கைம்மாறு பெற்றுக்கொள் இதோ! ஏமாங்கதன் கைக்குழந்தையைக் கொன்றதற்காக! இதோ! உன்னுடைய பிதாவைக் கொன்றதற்காக! இதோ! பாலாயனனைக் கொன்றதற்காக! இதோ! பாலசூரியனைக்கொன்றதற்காக! இதோ ஏமாங்கதனைக் கொல்ல முயன்றதற்காக! கடைசியாக இதோ! நேசனென்றும் பாராமல் என்னுயிருக்கே உலைவைத்ததற்காக! (சௌரியகுமாரன் இறக்கின்றான்.)

ஏமாங்கதன் வேகமாய் வருகிறான்.

ஏ. ஆ! குலசேகரா! இதென்ன! சௌரியகுமாரனைக் கொன்று விட்டாயே!

ஜெ. குலசேகரன் கொல்லவில்லை! ஜெயபாலன் கொன்றான்!

ஏ. என்ன! ஜெயபாலனா?

ஜெ. அரசே! நான் உமக்கு அன்றைத்தினம் நீர் என்னை யார் என்று கேட்டபொழுது ஒரு காலம் வரும் பிறகு எல்லாம் கூறுகின்றேனென்று சொன்னேனல்லவா? அக்காலம் வந்து விட்டது!—நான் தான் ஜெயபாலன்!

ஏ. நீயா ஜெயபாலன்?

ஜெ. ஆம், இந்த சௌரியகுமாரன் இவ்வளவு துர்க்கிர்த்தியங்களை யெல்லாம் செய்ய உதவியாயிருந்த விஷத்தை அவனுக்குக் கொடுத்த கொடும்பாவியாகிய ஜெயபாலன் நானே!

ஏ. அதிருக்கட்டும், ஆனால் சௌரியகுமாரனை நீ ஏன் கொன்றாய்?

ஜெ. சொல்லுகின்றேன் கேளும்! இவன் இப்படிப்பட்டவனென்றறியாது சிநேகத்தின் மீது நம்பி வேடிக்கையாக இவ்விஷத்தை இவனுக்குக் கொடுத்து இதன் சூட்சுமத்தை யெல்லாம் வெளியிட்டேன். பிறகு மறுநாள் நண்பனென்றும் பாராமல் இவன் நான் அறியாதபடி பட்சணத்தில் இவ்விஷத்தைக் கலந்து எனக்கே கொடுத்து பரீட்சைபார்த்தான். உளவறியாது அதை உட்கொண்ட நான் உடனே மூர்ச்சையாகவே என் உடலை இறந்தேனெனக்கருதியோ என்னவோ அரண்மனையின் மேற்கு மூலையிலிருக்கும் கேணியில் போட்டு விட்டான். அங்கே மூர்ச்சை தெளிந்தெழுந்த என்மன நிலைமை என்னமாயிருக்கவேண்டுமென்று நீரே யோசித்

துப்பாரும்! வெளியே செல்ல வழியறியாது திகைத்துக் கொண்டிருந்த நான் அக்கெவியின் கீழ் ஒரு சுரங்கமிருப்பது போலவும் அதன்வழியாக யாரோ ஒருவன் நடந்து வருவதுபோலவும் சப்தம் என் காதிற்படவே, நான் உற்றுக்கேட்டு, அச்சப்தம் செல்லுகிறவழியே நோக்கிச் சுவரிலுள்ள ஒரு மெல்லிய துவாரத்தின் வழியாக வெளியே பார்க்க, ஒருவன் கைக்குழந்தை ஒன்றை கையில் எடுத்துக்கொண்டு பூமியினின்றும் வெளியில் வரக்கண்டேன். அக்குழந்தையை அவன் அங்கு புதைத்துவிட்டு வந்தவழிச்சென்றான். நான் உடனே அக்கெவியின் கீழ் சுரங்க மொன்றிருக்க வேண்டுமென்று ஊகித்து, அதற்கு ஒரு வழி செய்துகொண்டு அதன் மூலமாகத் தப்பி வெளியில் வந்தேன். பிறகு நீர் எனக்குச் சொல்லிய சொற்களால் அம்மனிதன் சௌரியகுமாரன் என்றும் அக்குழந்தை உம்முடையதென்றும் கண்டறிந்தேன். அரசே, எனக்கிவ்வளவு துரோகம் செய்தவனுயிரை என்கையால் நான் வாங்குகிறேனென்று அன்று கெவியிலிருந்து வெளிப்பட்டவுடன் சபதம் செய்தேன்; அச்சபதத்தை இன்றே நிறைவேற்றினேன்!

ஏ. குலசேகரா!—ஜெயபாலா! அதெல்லா மிருக்கட்டும் நீ சபதம் செய்தாலெனக்கென்ன? என்னுடைய தம்பி எனக்கு எவ்வளவோ துரோகம் சைய்தபோதிலும் என்னை மன்னிப்பு கேட்டபின், என் தம்பி என் தம்பி தான்! அவனை நீ எப்படி கொல்லலாம்? உன் மீது நான் பழி வாங்குகின்றேன்.

(உடைவாளை எடுக்கிறான்.)

ஜெ. அரசே! சற்றுப்பொறும். என்னைக்கொல்வதானல் கொல்லும். நீர் கொன்றாலும் ஒன்றுதான் கொல்லாவிட்டாலும் ஒன்றுதான்; நான் எப்படியும் சீக்கிரம் இறக்கப் போகிறேன்! அன்று சௌரிய குமாரன் எனக்குக் கொடுத்த விஷம் என்னைக் கொல்லும் காலம் வந்து விட்டது. இதுவரையில் எனது மகிமையால் அதன் சேஷ்டைகளையெல்லாம் நான் அடக்கி வைத்திருந்தேன். இனி நான் இறக்கவேண்டியதுதான்; அதற்கு மாற்றில்லை! ஆயினும் நீர் இன்னும் உம்முடைய தம்பியை நம்புகின்றீரே! உமது பிள்ளைக்குப் பட்டங் கட்டியிருப்பதாக வல்லவோ எழுதியிருந்தான்; அதோ போய்பாரும், பாலசூரியனைக்கொன்று பின்புமுடிதரித்து சிங்காதனத்தின்மீது வளர்த்தியிருக்கிறான்!

ஏ. ஆ! ஆ! அப்படியா (பாலசூரியன் பிரேதத்தைப் பார்க்கிருன்) கண்ணே! பாலசூரியா! பாலசூரியா! இறந்தான் பாலசூரியன்! (அதன்மீது விழுகிருன்)

ஜெ. ஆ! இவ்வளவுக்கும் நானல்லவா காரணம்! நான் சௌரியகுமாரனது குணத்தை யறியாது அவனுக்கு அவ்விஷத்தைக் கொடுத்ததினலல்லவோ இவ்வளவும் விளைந்தது! ஈசனே! ஈசனே!—

ஏ. கண்ணே பாலசூரியா! நீயும் இறந்தாயோ! அப்பா! இனி நான் எவ்வாறு உயிர் வாழ்வேன்! கண்மணியே! உன் அன்னை இறந்தபொழுதே என் உயிர்போயிருக்கும், ஆயினும் நீ இருக்கிருயே என்று நான் உயிர்தரித்து உன் பொருட்டே இவ்வளவு கஷ்டப்பட்டு நான் இங்கு வந்தேன். கண்ணே! பாலசூரியா! நீ இந்நாட்டுக் கரசனுயரசாள்வதைக் காணவந்த நான் உன்னைப் பிணமாய்க் கண்டபின் எவ்வாறுயிர் வாழ்வேன்! பாலசூரியா! இதோ நீ சென்ற இடத்திற்கு நானும் வருகிறேன்!

(தன்னைத்தானே குத்திக்கொண்டு மரிக்கிருன்.)

கள்வரெல்லோரும் ஓடிவந்து திகைத்து நிற்கின்றனர்.

ஜெ. இறந்ததே நலம்!—அப்பா! நான் வந்தவேலை முடிந்துவிட்டது! என் உயிர் போகிறது!—சதானந்த ராஜனிடம் இவ்வரசை ஒப்புவித்து நீங்களெல்லாரும் கள்வர் தொழிலைவிட்டு இந்நாட்டில் பிரஜைகளாய் சுகமாய் வாழ்ந்திருங்கள்! நான் போய் வருகிறேன் (இறக்கிருன்.)

காட்சி முடிகிறது.

நாடகம் முற்றியது.

